# சின்டுவின் விருப்பம்



எனக்கு
இந்த சோப் தான்
வேண்டும்!

சரியான
தேர்வு, அம்மா!
மைசூர் சாண்டல்
பேபி சோப் சந்தன,
பாதாம் எண்ணெய்களைக்
கொண்டது. அது
சருமத்திற்கு மிகவும்
ஏற்றது.

கடந்த
80 ஆண்டுகளாக
சந்தனத்தின்
நற்குணத்தை
உங்கள்
இல்லத்திற்குக்
கொண்டு வருகிறது
மைசூர் சாண்டல்
சோப் நிறுவனம்











புத்திசாலிக்
குழந்தைகளின் விருப்பம்
மைசூர் சாண்டல்
பேபி சோப்



Discover



Andhra Pradesh

THE KOHINOOR OF INDIA

# போர்ரா - மலைகளில் மனக் கவர்ச்சி

இயற்கை அன்னையின் செல்லக் குழந்தை ஆந்திரப் பிரதேசம். ஏனெனில் அது தன் மகவிற்கு நம் நாட்டிலேயே நீளமான கடற்கரையையும் அழகிய மலைகளையும் அடர்ந்த காடுகளையும் அளித்துள்ளது. இம்மாநிலம் நீண்ட குகை அமைப்பையும் கொண்டுள்ளது. கர்நூல் மாவட்ட பேலும் குகை அமைப்பு இது. ஆயினும் போர்ரா குகை அமைப்பு மலைகளின் மீதுள்ள மிகப் பழமையானதாம்.

போர்ரா விஜயநகர மாவட்டத்தில் கிழக்குத் தொடர் மலைகளிடையே உள்ள ஒரு சிறிய கிராமம். விசாகப்பட்டணத்திலிருந்து தள்ளியுள்ள அரக்குப் பள்ளத்தாக்கிலிருந்து இந்த ஊர் ஆறு கி.மீ. தொலைவில் உள்ளது.

இச்சுண்ணாம்புக் கல் குகைகள் பூமிக்குள் 150 அடி ஆழத்தில் உள்ளன. கோஸ்தனி நதி இக்குகைகளில் ஒன்றில் உற்பத்தியாகி மலைகளிலும் சமவெளிகளிலும் பாய்ந்து பீமுனிபட்டணத்தருகே கடலில் சேர்கிறது. இக்குகைகளில் ஒரு சிவலிங்கமும், அந்த லிங்கத்தின் மேற்பகுதியில் ஒரு பசு மாடும் வடிவாகி உள்ளன. இந்த நதி அந்தப் பசு உருவின் மடியிலிருந்து உற்பத்தியாவதால் கோஸ்தனி என்ற பெயர் வந்தது.

ஆந்திரப் பிரதேச சுற்றுலாத் துறை இக்குகைகளில் விளக்கொளியை அமைத்து சுற்றுலாப் பயணிகள் இக்குகைகளில் கீழ்வரை போய் அங்கு இயற்கையாக உருவாகியுள்ள வடிவங்களைக் கண்டு களிக்க வசதி செய்துள்ளது. இவை சுண்ணாம்புக் கற்களால் நீராலும் காற்றாலும் கரைக்கப்பட்டு பல வடிவங்களில் உருவானவை. சுண்ணாம்புக் கல் போர்ரா குகைகள் லட்சக்கணக்கான ஆண்டுகள் பழமையானவை. இங்கு மனிதர்களும் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே வாழ்ந்து வந்தார்கள் என்று கருதப்படுகிறது.

அரக்குப் பள்ளத்தாக்கிற்குப் போகிறவர்ககள் டைடா காட்டு முகாமில் தங்கியும் போர்ரா குகைகளைப் பார்த்தும் பழங்காலப் பெருமையைக் கண்டு பூரிக்கிறார்கள்.

**இங்கு போய்ச் சேர :** விசாகப் பட்டணத்திலிருந்து 90 கி.மீ. தொலைவிலும் அரக்குப் பள்ளத்தாக்கில் இருந்து 15 கி.மீ. தூரத்திலும் உள்ள போர்ரா குகைக்கு ரயிலிலோ அல்லது பஸ்ஸிலோ போய்ச் சேரலாம்ட. விசாகப்பட்டணத்தில் இருந்து அரக்குப் பள்ளத்தாக்கு போகும் ரயில் பாதையில் போர்ரா குகை ரயில் நிலையம் உள்ளது.

**போர்ரா குகைகளுக்குச் செல்ல மறக்காதீர்கள்!**

சிறப்புப்படைப்பாக மதிமுகம் : 105 நவம்பர் : 2002 புன்னகை : 9



இந்தியப் புராதனக் கதைகள்

24



தவறு மக்களதே!

19



மர்மக்குளம்

11



விநாயகர்

45

# பொருளடக்கம்






SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**
***Remittances in favour of Chandamama India Ltd.***
**to**
**Subscription Division**
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony,
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail : subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**

இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத் தபால் வாயிலாக பனிரெண்டு இதழ்களுக்கு ரூ. 900
இந்தியாவிற்குள் ரூ. 120

**புக்போஸ்டில்**

உங்கள் சந்தாத் தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணியார்டரிலோ **சந்தமாமா இந்தியா லிமிடெட்** என்ற பெயரை எழுதி அனுப்பவும்.

இப்பத்திரிகையில் விளம்பரங்களை வெளியிடத் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

சென்னை

Ph : 044-234 7384
234 7399
**e-mail : advertisements@chandamama.org**

டில்லி

மோனா பாட்டியா
Ph : 011-651 5111
656 5513/656 5516

மும்பை

ஷகீல் முல்லா
Mobile : 98203-02880
Ph : 022-266 1599
266 1946/265 3057



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# ஒரே வழி தான்!

ஓர் ஆலயத்தில் அர்ச்சகர் மந்திரம் ஜெபிக்கையில் யாவரும் பேசாமல் இருக்க வேண்டும் என்பது விதி. ஒருநாள் அர்ச்சகர் மந்திரம் கூறிக் கொண்டிருக்கையில் அதைக் கேட்டுக் கொண்டிருந்தவர்களில் ஒருவன் மற்றவனிடம், ''இவர் தப்பும் தவறுமாகக் கூறுகிறார்,'' என்றான். அப்போது அவர்களுக்குப் பின்னால் இருந்தவன், ''இங்கு எதுவுமே பேசக் கூடாது என்பது விதி, தெரியுமா?'' என்றான். அப்போது மேலும் சிலர் முணுமுணுக்கவே, அர்ச்சகர் மந்திரம் சொல்வதை நிறுத்திவிட்டு, ''யார் இங்கே பேசுவது?'' என்று கோபமாக இரைந்தார். அப்போது ஒருவன், ''நான் வாய்கூடத் திறக்கவில்லையே!'' என்று உரக்கக் கூவினான்.

இன்றைய உலகம் இப்படித்தான் உள்ளது. மற்றவன் தான் தவறு செய்கிறான், நான் செய்வதில்லை என்ற எண்ணமே எல்லோரிடமும் ஓங்கி நிற்கிறது. எல்லாவித வன்முறைகளும், பயங்கரவாதமும் இத்தகைய மனப்பான்மையால் தான் பெருகுகின்றன. நாம் மனஉறுதியுடன் இருந் தால் நம் நாட்டிற்கு எந்த எதிரியும் இப்போது தீங்கு இழைப்பதுபோலச் செய்ய முடியாது. நாமும் நம் பொறுப்பை உணர்ந்து நடக்க வேண்டும்.

இந்நிலையைச்சரிப்படுத்துவது எப்படி? நாம் நம் கடமையை உணர்ந்து செயல்பட வேண்டும். ஒவ்வொருவரும் தம் மனச் சாட்சியைத் தொட்டுப் பார்த்து அதன்படி செயல்பட வேண்டும். அராஜகத்தையும் கட்டுப் பாடின்மையையும் கண்டு மதி மயங்கக் கூடாது. நாம் மலைபோல உறுதி யாக நம் கடமையைச் செய்வதில் நிற்க வேண்டும். இதுதான் நமக்கான ஒரே வழி. இதைத் தவிர வேறு எந்த வழியும் இல்லை.

தீபாவளி இருளைப் போக்கி ஒளி தருவது போல, நம் மன இருளை நீக்கி புத்தொளி வீசும்படி நாம் செய்வோம்.

---

ஆசிரியர் : விஸ்வம்
Visit us at : http://www.chandamama.org



இந்திய மாவீரர்கள் புதிர்ப் போட்டியில் கலந்து கொண்டு
அற்புதமான பரிசுகளை வெல்லுங்கள்

# இந்திய மாவீரர்கள்-14

நம் நாட்டின் சமூக சீர்திருத்தவாதிகள் சிலரைப் பற்றிய வினாக்கள் இவை. அவர்களை உங்களுக்குத் தெரியுமா?

முற்றிலும் சரியான விடைகள் கொண்ட மூன்று கூப்பன்களுக்கு சைக்கிள்கள் பரிசளிக்கப்படும்*

1. 1830ல் 'சதி' எனும் உடன்கட்டை ஏறும் வழக்கத்தை எதிர்த்து இங்கிலாந்தில் வேண்டுகோள் அளித்தேன். கல்கத்தாவில் முதலாவது இந்திய விஞ்ஞான கல்விக் கூடத்தை நிறுவிய நான் யார்?

------------------------------------------------

2. 'ஒரே சாதி, ஒரே மதம், ஒரே கடவுள்' என பிரசாரம் செய்தேன். கேரளாவில் பல ஆலயங்களைக் கட்டி அனைவரும் அவற்றில் வழிபடச் செய்த நான் யார்?

------------------------------------------------



3. நான் பசு பாதுகாப்புக் குழுவை நிறுவினேன். நான் விக்கிரக ஆராதனையையும் உயிரினங்களைப் பலியிடுவதையும் எதிர்த்தேன். நான் யார்?

------------------------------------------------

4. ஏழைகள் உயரவும், எழுத்தறிவின்மையைப் போக்கவும், பெண்களின் முன்னேற்றத்திற்காகவும் போராடினேன். இந்திய அரசியல் சட்டத்தை உருவாக்கியவன் எனப் பெயர் பெற்ற நான் யார்?

------------------------------------------------

5. 'ஆனந்த வனம்' என்ற கிராம மருத்துவமனையை நிறுவி பெரும் வியாதிக்காரர்களையும் மற்ற நோயாளிகளையும் கவனிக்கச் செய்தேன். 1999ல் காந்தி அமைதிப் பரிசு பெற்ற நான் யார்?

------------------------------------------------

ஒவ்வொரு வினாவிற்கும் அதன் கீழுள்ள வெற்றிடத்தில் விடையைத் தெளிவாக எழுதவும். இந்த ஐவரில் உங்களுக்கு பிடித்தமான தேசியமாவீரர் யார் என்றும் அதற்கான காரணங்களை பத்து சொற்களில் எழுதவும். எனக்கு மிகவும் பிடித்த புராண மாவீரர் ......................................

..........................................................................

..........................................................................

போட்டியாளரின் பெயர்: ......................................

வயது: ................ வகுப்பு: ..........................

முகவரி: ..........................................................

..........................................................................

பின்கோடு: ...................... போன்: ......................

போட்டியாளரின் கையொப்பம்: ..............................

பெற்றோரின் கையொப்பம்: ..................................

இந்தப் பக்கத்தைக் கத்தரித்துக் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

இந்திய மாவீரர்கள் புதிர்ப்போட்டி-14
சந்தமாமா இந்தியா லிமிடெட்
நெ. 82. டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை-600 097
அனுப்ப வேண்டிய கடைசித் தேதி டிசம்பர் 5, 2002

நிபந்தனைகள்:

1. இப்போட்டி 8 முதல் 14 வயதிற்குட்பட்டவர்களுக்கு மட்டுமே.
2. * எல்லா மொழிப்பதிப்புகளின் கூப்பன்களிலிருந்தும் மூன்று பேர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இச்சிறார்களுக்கு அவர்களுக்கு ஏற்ற அளவு சைக்கிள்கள் வழங்கப்படும். முற்றிலும் சரியான விடைகள் கொண்ட பல கூப்பன்கள் இருந்தால், 'எனக்கு மிகவும் பிடித்தமான மாவீரர்' என்ற தலைப்பில் எழுதப்பட்ட வாக்கியங்களில் சிறந்தனவாகத் தேர்ந்தெடுக்கப்படுபவைகளுக்குப் பரிசு அளிக்கப்படும்.
3. நடுவர்களின் தீர்ப்பே இறுதியானது.
4. இப்போட்டி தொடர்பாக எவ்விதக்கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்ளப்படமாட்டாது.
5. வெற்றிபெற்றவர்களுக்குத் தபால் வாயிலாக முடிவுகள் தெரிவிக்கப்படும்.

இப்பரிசுகளை உங்களுக்கு அளிப்பவர்கள்






## பண்டரிபுர யாத்திரை



நீங்கள் எந்தப் புனிதத் தலத்திற்காவது நடந்தே போயிருக்கிறீர்களா? பண்டரிபுர விட்டலநாதரைக் காணச் செல்லும் மராட்டிய வர்க்காரிகளுடன் சேர்ந்து இந்த யாத்திரையைத் தொடங்கலாம். இந்த வருடாந்திர பண்டரிபுர யாத்திரை கடந்த 700 ஆண்டுகளாகத் தொடர்ந்து நடக்கிறது. இந்திரயானி நதிக்கரையில் உள்ள ஆலிண்டியில் இது தொடங்கி சந்திரபாகா நதிக்கரையிலுள்ள பண்டரிநாதர் கோயி லில் போய் முடிகிறது. இந்த யாத்திரை நடந்து முடிய ஒரு மாத காலம் பிடிக் கும். இந்த வழியை மகா மார்க்கம் என்று கூறுகிறார்கள். ஆடி மாதத்தில் இது நடைபெறுகிறது.

பக்தர்கள் அபங்களையும், பஜனைப் பாடல்களையும் பாடிக் கொண்டும், பெண்கள் சிறு பித்தளைப் பாத்திரங்களில் துளசியைப் போட்டு எடுத்துக் கொண்டும் கூட்டம்கூட்டமாக நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் இங்கு வருகிறார்கள். வழியிலுள்ள மக்கள் அவர்களுக்கு உணவளித்து உபசரிக்கிறார்கள்.

## இரவில் மீன் பிடித்தல்



நிகோபார் ஆதிவாசிகள் மீன்பிடிக்கப் பல புதிய வழிகளைக் கையாள்கிறார்கள். இரவில் மீன் பிடிப்பது அவற்றில் ஒன்று. அலை கொந்தளிக்கும்போது கடல்நீர் கடற்கரையில் இருந்து சற்றுத் தள்ளி இருக்கும். அப்போது பவளப் பாறைகள் தென்படும். இவற்றின் மீது சிறு மீன்கள் இருக்கும். இச்சமயத்தில் தென்னை நார் தீவட்டிகளுடன் ஆதிவாசிகள் கடலுக்கு வந்து மீன் பிடிக்கிறார்கள். இதில் ஆண்கள், பெண்கள், குழந்தைகள் என யாவரும் கலந்து கொள்கிறார்கள்.

## இந்தியாவில் அறிந்திராத இடங்கள்

# பிச்சாவரம்



தமிழ்நாட்டில் சுற்றுலா இடங்களில் பிச்சாவரம் பார்க்கத்தக்க இடமாகும். இது பல அரிய மரம் செடிகளைக் கொண்ட கண்கவர் தோப்பாகும். இம்மர வேர்கள் தண்ணீரிலேயே மூழ்கி இருக்கும். பிச்சாவரம் உலகிலேயே மிகவும் ஆரோக்கியத்தை அளிக்கும் தோப்புகள் கொண்டுள்ளது.

பல தீவுகளில் கடல்நீர் சூழத் தோப்புகள் அமைந்துள்ளன. இத் தோப்புகளாலான இயற்கை வனம் மிகவும் ரம்மியமானது. இதனை ஒரு மணல்மேடு கடலிலிருந்து பிரிக்கிறது. கடலை இங்கிருந்து வெள்ளாறும் கொள்ளிடமும் இணைக்கிறது. இங்குள்ள நீரில் படகுவிட்டும் பலவித நீர் விளையாட்டுகளும் விளையாடப்படுகின்றன.

மரம், செடிகொடிகளால் சூழப்பட்ட இங்குள்ள நீர் நிலை இயற்கையை நேசிப்பவர்களுக்கு ஒரு வரப்பிரசாதம். அரிய மர வகைகள் பலவற்றை இங்கு காணலாம்.

இயற்கையின் அழகைக் கண்டு களிக்க சுற்றுலாப் பயணிகள் தினமும் நூற்றுக்கணக்கில் வந்துகொண்டே இருக்கிறார்கள்.

நீங்கள் பிச்சாவரத்திற்கு வரும் பொழுது கேமராவையும் தொலை நோக்கியையும் (பைனாகுலர்) மறக்காமல் எடுத்து வாருங்கள். பறவைகளைக் கண்டு ரசிக்க இவை உதவும். பல நாட்டுப் பறவைகள் இங்கு வந்து கூடுவதால் அவற்றைக் கண்டு களிக்கலாம்.

## இங்கு செல்ல வழி

நடனக் கலை தெய்வமான நடராஜர் கோயில் கொண்டிருக்கும் சிதம்பரத்திலிருந்து பிச்சாவரம் 16 கி.மீ. தொலைவில் உள்ளது. சிதம்பரம் இருபாதையால் சென்னை, திருச்சி ஆகிய நகரங்களோடு இணைக்கப்பட்டுள்ளது. மிக அருகிலுள்ள விமான நிலையம் திருச்சி. இங்கு சுற்றுலாப் பயணிகள் தங்க வசதிகளையும் உணவு உண்ண ஓர் உணவகத்தையும் தமிழ்நாடு சுற்றுலா முன்னேற்றக் கழகம் அமைத்துக் கொடுத்துள்ளது. பஸ், டாக்ஸி, ஆட்டோ ரிக்ஷா போன்றவை சுற்றுலாப் பயணிகள் போய்வரக் கிடைக்கும்.



# மர்மக் குளம்

## 9

(ஜெயசீலன் எய்த அம்பு மனிதக் குரங்கின் மீது பட்டதும் அதை எய்தவன் யார் என்று கிருபாணஜித்தன் பார்த்தான். தன் பகைவனான ஜெயசீலன் தான் அவன் என்று கண்டு மொடாக் கூடடத்தவரோடு சேர்ந்து அவர்களது இருப்பிடத்திற்கு ஓடினான். மொடாப் படைத் தலைவன் அவனை இகழவே, கிருபாணஜித்தன் ஆத்திரம் கொண்டு மனிதக் குரங்கை ஏவி அவனைத் தாக்கச் சொன்னான். அதன் பிறகு -)

கிருபாணஜித்தனின் இந்தச் செயலைக் கண்டு மொடாக் கூட்டத்தினர் கோபம் கொண்டு அவனையும் மனிதக் குரங்கையும் தாக்கலானார்கள். இதைக் கண்ட கிருபாணஜித்தன் பயந்து நடுநடுங்கினான். பல பேர்களின் தாக்குதலை அவன் ஒருவனால் சமாளிக்க முடியாது தானே!

அதனால் அவன் சட்டெனத் தன் ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு புன் சிரிப்புடன், ''அவசரப்படாதீர்கள்! நான் உங்கள் பகைவன் அல்ல, நண்பனே! இந்த மனிதக் குரங்கை எப்படிப் பழக்கி இருக்கிறேன் என்பதை உங்களுக்குக் காட்டவே இப்படிச் செய்தேன்,'' என்றான். மனிதக் குரங்கினிடமும் அ்வன் தாக்குதலை நிறுத்து எனவே, அதுவும் படைத் தலைவனை எதுவும் செய்யாமல் நின்றது.

மொடாக் கூட்டப் படைத் தலைவன் பெருமூச்சு விட்டவாறே ஒரு மேட்டின் மேல் உட்கார்ந்தான். அவனது ஆட்களும் அவனைச் சுற்றி



நின்றார்கள். அப்போது அவர்களின் படைத் தலைவன், ''எங்கிருந்தோ வந்த இவனை நம்பினேனே! அது என் முட்டாள்தனம்!'' என்று கூறித் தன் தலையில் அடித்துக் கொண்டான்.

பிறகு அவன் ''சரி, இனிமேலாவது நாம் எச்சரிக்கையுடன் நடப்போம். இனி நாம் என்ன செய்யப் போகிறோம் என்பதை அவன் பார்த்துக் கொண்டிருக்கிறான். அவனோடு நேருக்கு நேராக நின்று நாம் சண்டை போட முடியாது. அவனிடம் உள்ள நீண்ட வாளையும், அவனது மனிதக் குரங்கையும் அவனிடமிருந்து பிரித்துவிட வேண்டும். இம்முயற்சியில் நம்மில் சிலர் இறந்தாலும் பரவாயில்லை. அவ்வாறு செய்தாலே நாம் அவனைக் கொல்ல முடியும்,'' என்றான்.

அப்போது ஒருவன், ''இவனைக் கொல்ல வழி என்ன?'' என்று கேட்கவே, படைத் தலைவனும், ''வழியா கிடைக்காமல் போய்விடும்? யோசிப்போம்!'' என்றான். இதற்குள் கிருபாணஜித்தன் மனிதக் குரங்கைப் பிடித்து இழுத்துக் கொண்டு அங்கே வந்து, ''இங்கே என்ன சதி ஆலோசனை நடக்கிறது? என்னையும் இதையும் கொல்லத் திடீரெனப் பாயத் திட்டம் தீட்டுகிறார்களா?'' என்று கேட்டான்.

மொடாக் கூட்டப் படைத் தலைவனோ, ''அப்படி எல்லாம் எதுவும் இல்லை. இப்போது எங்களுக்குச் சிக்கலான பிரச்சினை ஏற்பட்டுள்ளது. இனிமேலும் நாங்கள் இங்கு இருந்தால் ஆபத்து தான். அதனால் மாலை ஆவதற்குமுன் எங்கள் இருப்பிடத்தை அடைந்துவிட வேண்டும்,'' என்றான்.

இதைக் கேட்ட கிருபாணஜித்தன் பயந்து போனான். காட்டில் தனியாகத் திரிந்து பட்ட கஷ்டங்கள் எல்லாம் அவனது நினைவிற்கு வந்தான். அதனால் அவன் மொடாக்கூட்டப் படைத் தலைவனிடம் தாழ்ந்த குரலில் ''படைத் தலைவா! சற்றும் பயப்படாதே! நான் உங்களைப் பாதுகாக்கிறேன். அதற்காக எனக்கு உன் உதவி தேவை. அதுவும் இன்றிரவு நடுராத்திரியில் நீ செய்ய வேண்டும். அதற்குப் பிறகு உன் பகைவர்களை நானும் இந்த மனிதக் குரங்கும் பூண்டோடு அழித்துவிடுவோம். அப்போது இந்தப் பரந்த காட்டுப் பகுதியும், மலைகளும் உன் வசமாகி



விடும். நீதான் இதன் மன்னன். இது நடக்கும் என்று உனக்கு வாக்குறுதி அளிக்கிறேன்,'' என்றான்.

இதைக் கேட்ட மொடாக் கூட்டப் படைத் தலைவன் மிகவும் திருப்தி அடைந்தான். அப்போது கிருபாண ஜித்தன், ''சரி, நாம் இப்போது உன் இருப்பிடத்திற்குப் போவோம். அங்கு உணவு உண்டு சற்று இளைப் பாறுவோம்,'' என்றான். படைத் தலைவனும் ''உங்கள் கூடாரத்தில் உணவு தயாராக உள்ளது. நீங்கள் போய் உண்டு இளைப்பாறுங்கள். இன்று நள்ளிரவில் உங்களுக்கு உதவி புரியத் தயாராக இருக்கிறோம்,'' என்றான்.

கிருபாணஜித்தன் அங்கிருந்து சற்று தூரத்தில் அமைக்கப்பட்டிருந்த கூடாரத்திற்குச் செல்லலானான். போகுமுன் யாவரையும் பார்த்து, ''நள்ளிரவு வரை யாரும் என் கூடா ரத்திற்கு வந்து என்னைத் தொந்தரவு செய்யக் கூடாது. அதுவரை நான் தியானத்தில் கண் மூடிக் கொண்டு இருப்பேன்,'' என்றான். படைத் தலைவனும், ''அப்படியே செய் யுங்கள்!'' என்றான். அதன்பின் அவன் நம்பிக்கைக்குப் பாத்திரமான நான்கு வீரர்களை தன்னுடன் அழைத்துக் கொண்டு தன் இருப்பிடத்திற்குச் சென்றான்.

இதற்குப் பின் மூன்று மணி நேரம் கழிந்தது. நன்கு உண்ட பின் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்த கிருபாணஜித்தன் திடீரெனக் கண் விழித்து, ''என்ன இது! வேப்பெண் ணெய் வாசனை வருகிறதே! யார் என்ன செய்கிறார்கள்?'' என்று உரத்த குரலில் அதட்டிக் கேட்டான்.

வெளியிலிருந்து ஒருவன், ''வேப் பெண்ணெய் மட்டும் அல்ல. அத னுடன் நல்லெண்ணெயும் கலக்கப் பட்டு உங்கள் கூடாரத்தைச் சுற்றித் தெளிக்கப்பட்டுள்ளது. இதனால் உங் கள் கூடாரத்திற்குள் கொசு, விஷக் கிருமி, புழு, பூச்சி எதுவுமே நுழை யாது. நீங்கள் நன்கு தூங்கலாம்,'' என்றான் மிகவும் பணிவாக.

''ஓ! உன் படைத் தலைவன் இப் படிச் செய்யச் சொன்னானா? பேஷ், பேஷ்! ஒழுங்காகச் செய்து முடி!'' எனக் கூறிவிட்டு கிருபாணஜித்தன் மறுபடியும் கண்ணை மூடிக் கொண் டான். சற்று நேரத்தில் பலத்த குறட் டையும் கிளம்பியது. அப்போது மொடாக் கூட்டப் படைத் தலைவன்



ஒரு சில வீரர்களோடு அங்கு வந்தான். அவன் சைகை செய்யவே, ஒரு வீரன் சத்தப்படுத்தாமல் கிருபாணஜித்த னின் கூடாரத்திற்குள் சென்றான். அங்கு ஒரு மூலையில் சாய்த்து வைக்கப்பட்டிருந்த கிருபாணஜித்த னின் நீண்ட வாளை அவன் எடுத்துக் கொண்டு வெளியே வந்தான். அதன் பின் அந்த கூடாரத்தைச் சுற்றி நெருப்பு வைக்கப்பட்டது.

நெருப்பு 'குப்'பென்று பற்றிக் கொண்டது. எண்ணெய் கருகும் வாசனையால் கிருபாணஜித்தனின் தூக்கம் கலைந்தது. கண் விழித்துப் பார்த்த போது தன் இருப்பிடத்தைச் சுற்றி நெருப்பு பற்றிக் கொண்டு எரிவதைக் கண்ட அவன் உரத்த குரலில் ''ஆ! மோசம்! நம்பிக்கைத் துரோகம்! இதற்குப் பழிவாங்கியே தீருவேன்,'' என்று கத்தினான். பிறகு அவன் தன் வாளை எடுப்பதற்காக அதை வைத்த இடத்தைப் பார்த்தான். அது அங்கே இருக்கவில்லை.

இச்சமயத்தில் மனிதக் குரங்கு பயங்கரமாகக் கத்தியவாறே தன் னைக் கட்டியிருந்த சங்கிலியை அறுத்துக் கொண்டு தீயிலிருந்து தப்ப அங்கும் இங்கும் ஓடியது. அப்போது கிருபாணஜித்தன் தானும் அதனோடு தப்பிச் செல்ல அதன் இடுப்பில் தொங்கிய இரும்புச் சங்கிலியைப் பிடித்துக் கொண்டான். மனிதக் குரங்கு ஒரு குதி குதித்து கூடாரத் திற்கு வெளியே வந்து விழுந்தது. கிருபாணஜித்தனும் அதனோடு சேர்ந்து வெளியே விழுந்தபோதிலும் அவன் சங்கிலியை விட்டுவிட்டான்.

மனிதக் குரங்கு ஓடுவதைக் கண்ட படைத் தலைவன் தன் ஆட்களிடம், ''குரங்கைப் போகவிடுங்கள். கிரு பாணஜித்தன் தப்பி ஓடிவிடாமல் பார்த்துக் கொள்ளுங்கள். ஈட்டிகளால் அவனைத் தாக்குங்கள்!'' என்றான்.

அங்கு நடந்து கொண்டிருந்த வற்றை எல்லாம் இரு விசித்திர மனிதர்கள் பார்த்தனர். அவர்கள் குதிரை போலத் தோன்றும் விசித்திர மிருகங்களின் மீது அமர்ந்திருந்தனர். அவர்கள் மீன் செதில்களாலான ஆடைகளை அணிந்திருந்தார்கள்.

ஒருவன் தன் இடைவாளை உரு வியவாறே, ''அண்ணா சர்ப்பநகா! அங்கே பார்! ஒரே கூச்சல், குழப்பம்! என்ன நடக்கிறதோ தெரியவில் லையே!'' என்று கூற, அதற்கு அவன் ''தம்பி சர்ப்பஸ்வரா! இதோ பார்,

யார் எப்படிப் போனால் நமக்கு என்ன? நாம் வந்த வேலையைத் தான் கவனிக்க வேண்டும்,'' என்றான்.

சர்ப்பஸ்வரனோ, ''அது சரி, அண்ணா! ஆனால் கண்ணெதிரே நடந்து கொண்டிருப்பதைப் பார்க்காமல் இருக்க முடியுமா? மனிதக் குரங்கு ஒன்று குள்ளர்களை அடித்து நொறுக்கிக் கொண்டு இருக்கிறது. அதற்குத் துணையாக ஒரு மனிதன் நின்று கொண்டு வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறான். இந்தக் கொடூரச் செயல்களைக் கண்ட பிறகும் சும்மா இருக்க முடியுமா?'' என்று கேட்டான்.

அதைக் கேட்ட சர்ப்பநகன், ''நீ சொல்வது சரிதான். அந்த மனிதக் குரங்கையும் அதற்கு உதவும் அந்த அற்ப மனிதனையும் பிடித்து உதைக்க வேண்டும். ஒருவேளை அந்த மனிதனிடமிருந்து, நாம் தப்பி ஓடிய நம் ஆளைப் பற்றிய சமாச்சாரம் எதையாவது தெரிந்து கொள்ள முடியும்,'' எனக் கூறி ஒரு நீண்ட கயிற்றைக் கையில் எடுத்துக் கொண்டான். இருவரும், மனிதக் குரங்கும் கிருபாணஜித்தனும் இருந்த இடத்தை அடைந்தார்கள்.

மனிதக் குரங்கு அங்குள்ள குடிசைகளை அழித்துக் குள்ளர்களைத் தூக்கி எறிந்து கொண்டிருந்தது. கிருபாணஜித்தன் ஒரு மரக்கிளையை ஒடித்து எடுத்துக் கொண்டு குள்ளர்களை அடித்து விரட்டிக் கொண்டிருந்தான்.

அப்பொழுது சர்ப்பஸ்வரன், ''அண்ணா! நான் மனிதக் குரங்கைப் பிடிக்கிறேன். நீ அந்த மனிதனைப் பிடித்துக் கட்டிப் போடு!'' எனக் கூறிவிட்டுத் தன் குதிரையை மனிதக் குரங்கு இருக்கும் இடத்தை நோக்கிச் செலுத்தினான். தன் கையிலிருந்த கயிற்றில் சுருக்கு முடி போட்டு சர்ப்பநகன் கிருபாணஜித்தன் மீது வீசி அவன் கழுத்தில் விழச் செய்து





மாட்டிய கயிறை அவிழ்த்துவிடுங்கள்! அப்போது தான் என்னால் சரியாகப் பேச முடியும்,'' என்றான். சர்ப்பநகனும், ''கொஞ்சம் தளர்த்தி விடுகிறேன். ஆனால் நீ மட்டும் தப்பி ஓட முயன்றால் மறுவிநாடியே கயிறை இழுத்து கழுத்தை இறுக்கி உன்னைச் சாகடித்துவிடுவேன்!'' என்றான். கிருபாணஜித்தனும், ''அப்படி எல்லாம் செய்ய மாட்டேன்,'' எனவே சர்ப்பநகனும் பிடியைத் தளர்த்தினான்.

கிருபாணஜித்தனும், ''ஐயா! மகரகேது எங்கே இருக்கிறான் என்பது எனக்குத் தெரியாது. சில நாட்களுக்கு முன் அமராவதி நகரைச் சேர்ந்த ஜெயசீலன் என்பவனும் அவனது நண்பனான மந்திரவாதி ஒருவனும் மகரகேதுவைப் பலவிதத்திலும் துன்புறுத்தினார்கள். இதைக் காட்டுவாசிகள் கூறக் கேட்டேன்,'' என்றான். அப்போது மொடாக் கூட்டத்தின் படைத் தலைவன், ''ஐயா! நீங்கள் இங்கே பேசிக் கொண்டிருக்கிறீர்களே! உங்களது நண்பரின் நிலை என்ன என்று பார்க்கவில்லையே!'' என்றான்.

அதைக் கேட்ட சர்ப்பநகன் சுற்றிலும் பார்த்துவிட்டு, ''எங்கே என் தம்பி? அவனுக்கு என்ன ஆயிற்று?'' என்று கேட்டான். படைத் தலைவனும் ''அவனும் மனிதக் குரங்கும் அடித்து சண்டை போட்டுக் கொண்டு அந்தத் தோப்பிற்குள் போயிருக்கிறார்கள். அவன் ஏறிவந்த விசித்திர குதிரையும் எங்கோ ஓடிவிட்டது. அந்த

கயிறை இழுக்கலானான். கழுத்தில் விழுந்த சுருக்குக் கயிறு இறுகவே, கிருபாணஜித்தன் திக்குமுக்காடிப் போய் அலறினான்.

கிருபாணஜித்தன், ''ஐயோ! என்னைக் கொல்லாதே! நானும் உன்னைப் போல ஒரு மனிதன் தான். ஓர் அதிசய யானை மீது ஏறி வந்த உங்களைப் போன்ற ஒருவனுக்கு நான் பலவிதத்தில் உதவி இருக்கிறேன்,'' என்றான். அதைக் கேட்டு சர்ப்பநகன் ஆச்சரியப்பட்டு, ''ஓ! நீ அந்த மகரகேதுவை அறிவாயா? அவன் உன் உதவியைப் பெற்றானா? அப்படியானால் அவனுக்கு ஏதோ சிக்கலான பிரச்சினை இருக்க வேண்டும். இப்போது அவன் எங்கே இருக்கிறான்?'' என்று கேட்டான்.

கிருபாணஜித்தனும் இரு கைகளையும் கூப்பி, ''முதலில் என் கழுத்தில்

மனிதக் குரங்கைப் பழக்கியவன் இந்த கிருபாணஜித்தனே. அவன் தான் உன் அண்ணனை அடிக்கச் சொல்லி அந்த மனிதக் குரங்கைத் தூண்டிவிட்டிருக்கிறான்,'' என்றான்.

சர்ப்பநகனும், ''ஓ! இவன் இப்படிப்பட்ட மோசக்காரனா?'' என்று கூறி, கிருபாணஜித்தனின் கழுத்தை இறுக்கி, தான் பிடித்திருந்த கயிறை படைத் தலைவனிடம் கொடுத்து ''இவன் ஓடிப் போய்விடாமல் பார்த்துக் கொள்! நான் அந்த மனிதக் குரங்கைக் கொன்றுவிட்டு என் அண்ணனோடு வருகிறேன்,'' என்று கூறிவிட்டு விரைந்து சென்றான்.



குள்ளர்கள் வாழும் பகுதியில் நெருப்பு மூண்டதையும், கிருபாணஜித்தனுடனும் மனிதக் குரங்குடனும் குள்ளர்கள் போராடியதையும், அவர்களின் கூச்சலையும் தூரத்திலிருந்து ஜெயசீலனும் சித்தசாதகனும் பார்த்தார்கள். இதற்கென்ன காரணம் என்று அவர்கள் யோசித்தார்கள். எனவே அவர்கள் கடாக் கூட்டப் படைத் தலைவனை அனுப்பி என்ன விஷயம் என்று அறிந்துவரச் சொன்னார்கள்.

அவனும் இரு வீரர்களைத் தன்னோடு அழைத்துக் கொண்டு சென்றான். மொடாக் கூட்டத்தவர் வசிக்கும் பகுதியைச் சற்றுத் தொலைவில் நின்று பார்த்தான். அங்கு நடந்ததைக் கண்டு அவன் ஒரேயடியாக மகிழ்ந்து போனான். அப்போது சர்ப்பநகனும் சர்ப்பஸ்வரனும் தம் விசித்திரக் குதிரைகளின் மீது அமர்ந்து அக்கூட்டத்தினரின் இருப்பிடத்திற்கு வந்ததையும் கண்டு கடாக் கூட்டப் படைத் தலைவன் மிகவும் ஆச்சரியப்பட்டான். அவன் அங்கிருந்து உடனே வேகவேகமாகத் திரும்பிப் போய் ஜெயசீலனிடம் தான் கண்டதை எல்லாம் விவரமாகக் கூறினான்.

அதைக் கேட்டதுமே சித்தசாதகன் தன் ஈட்டியை எடுத்துச் சுழற்றியவாறே, ''அந்த இருவரும் மகரகேதுவின் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் என்பதில் சந்தேகமே இல்லை. இவர்களைப் பிடித்து மகரகேதுவை அடைந்து நம் அரசகுமாரனையும் அரசகுமாரியையும் கண்டுபிடித்து விடலாம். வேலை மிக எளிதில் முடிகிறதே!'' என்று மகிழ்ச்சி பொங்கக் கூவினான்.

அதைக் கேட்ட ஜெயசீலன் சிரித்தவாறே, ''இதோ பார்! யாரோ இரண்டு பேர்கள் கிடைக்கப் போகிறார்கள்

என்பதைக் கூறி அரசகுமாரனும் அரச குமாரியும் கிடைத்துவிட்டார்கள் என எண்ணி மகிழ்கிறாயே! அந்த இரு வரும் இந்தப் பகுதிக்கு ஏன் வந் தார்கள் என்பதை முதலில் அறிய வேண்டும். அதன் பிறகு அவர்களை எப்படிப் பிடிப்பது என்றும் யோசிக்க வேண்டும்,'' என்றான்.

அதைக் கேட்ட சித்தசாதகன் தன் ஈட்டியைத் தாழ்த்தியவனாய், ''என் உற்சாகமே போய்விட்டதே. இப் போது என் ஈட்டிக்கு வேலையே இல்லையா?'' என்று கேட்டான்.

ஜெயசீலனும் ''கவலைப்படாதே! நீ உன் ஈட்டியையும் மந்திர சக்தி யையும் பயன்படுத்த எப்போது வேளை வரும் என்பதைச் சொல் கிறேன். அப்போது அவற்றைப் பயன் படுத்து!'' என்றான். பிறகு அவன் கடாக் கூட்டப் படைத் தலைவனி டம் ''நீ சில வீரர்களோடு எங்களு டன் வர வேண்டும்,'' என்றான்.

அந்தப் படைத் தலைவனும் சமிக்ஞை செய்யவே, உடனே சில வீரர்கள் வந்தார்கள். ஜெயசீலன் சித்த சாதகனையும் படைத் தலைவனை யும் வீரர்களையும் கூட்டிக் கொண்டு அங்கிருந்து புறப்பட்டான்.

அவர்கள் கொஞ்சதூரம் போனதும் மனிதக் குரங்கு பயங்கரமாகக் கத்து வது அவர்களுக்குக் கேட்டது. அவர் கள் எல்லோரும் அந்த சத்தம் வந்த இடத்தைப் பார்த்தார்கள். மனிதக் குரங்கு விநோத ஆடைகள் அணிந்த ஒருவனைத் தூக்கிக் கொண்டு அங் கும் இங்கும் ஓடிக் கொண்டிருந்தது. சித்தசாதகன், ''நாம் பிடிக்க நினைத்த இருவரில் ஒருவன் இங்கு இருக்கி றான். மற்றவன் என்ன ஆனானோ?'' என்று ஜெயசீலனிடம் கேட்டான்.

அப்போது அங்கு வந்த சர்ப்ப நகன், ''சர்ப்பஸ்வரா! நீ எங்கிருக்கி றாய்?'' என்று உரத்த குரலில் கேட் டான். அப்போது ஜெயசீலன் மற்றவர் களிடம், ''சட்டென மறைந்து கொள் ளுங்கள். யாரும் இவன் கண்ணில் பட்டுவிடக் கூடாது. எப்பாடுபட்டா வது நாம் இவனைப் பிடித்துவிட வேண்டும்,'' என்று கூறினான்.

*(தொடரும்)*



நவீன
வேதாளக்
கதை

# தவறு மக்களதே!

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின் அவன் கீழே இறங்கி அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து, ''மன்னனே! இந்த பயங்கர நள்ளிரவில் நீ தொடர்ந்து முயல்வதைப் பார்த்தால் உனக்கு சிக்கலான ஒரு பிரச்சினை ஏற்பட்டுள்ளது என்று தெரிகிறது. உன்னைப் போலவே ஒரு பெரும் பிரச்சினையைத் தீர்க்க தீரசிம்மன் என்ற மன்னன் கையாண்ட வழி பற்றிக் கூறுகிறேன்.



கவனமாக அவனது கதையைக் கேள்!'' என்று சொல்லிக் கதையைக் கூறலாயிற்று.

தீரபுரம் என்ற நாட்டை தீரசிம்மன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். மக்களின் அபிமானத்தைப் பெற்ற அவன் தனக்கு மகன் வேண்டுமே எனக் கவலைப்படாமல் ஆட்சியை நல்லவிதமாகப் புரிந்து வந்தான்.

மக்கள் அவனை அதற்காகப் பாராட்டிப் புகழ்ந்தபோதிலும் அவனுக்குப் பின் மன்னனாகிறவன் எத்தகைய ஆட்சியை அளிப்பானோ என்று கவலைப்பட்டார்கள்.

சில பிரமுகர்களும் தீரசிம்மனிடம், ''அரசே! உங்களுக்கோ சந்தானம் என்று இல்லை. உங்களுக்குப் பின் இந்த நாட்டை ஆள ஒருவன் வேண்டுமே! அதனால் யாரையாவது தத்து எடுத்து அவனுக்கு எல்லாக் கலைகளையும் பயில்வித்து ஆட்சி புரிய தகுதி பெற்றவனாக ஆக்குங்கள்,'' என்று யோசனை கூறினார்கள்.

அப்போது மன்னன் ''எனக்குப் பின் இந்த நாட்டை ஆளப் போகிறவன் என் வாரிசாகத் தான் இருக்க வேண்டும் என்பது இல்லை. அரசனாகத் தகுதி உள்ளவனைத் தேர்ந்து எடுப்போம். தகுதி பெற்றவன் கிடைத்தால் அவனை இந்த நாட்டின் மன்னனாக்கிவிடலாம். இதற்கான போட்டியை அறிவிக்கிறேன்,'' என்று கூறி நாடு முழுவதும் வருங்கால மன்னனைத் தேர்ந்து எடுக்கப் போட்டி நடைபெறும் என்று பறைசாற்றுவித்தான்.

அப்போட்டியில் கலந்து கொள்ளப் பல இளைஞர்கள் வந்தார்கள். தீரசிம்மன் தானே அவர்களிடம் கேள்விகள் கேட்டுப் பரீட்சித்துப் பார்த்தான். முடிவில் அவன் குணசீலன், ஜெயசீலன் என்றஇரு இளைஞர்களைத் தேர்ந்தெடுத்தான்.

அந்த இருவரில் யாரை மன்னனாக்குவது என்ற பிரச்சினை தீரசிம்மனுக்கு வந்தது. ஏனெனில் எல்லாவிதத்திலும் இருவருமே தகுதி பெற்றவர்களாக விளங்கினார்கள். எனவே அவன் அவர்களிடம், ''நீங்கள் எல்லா சாஸ்திரங்களிலும் சம நிலையில் இருக்கிறீர்கள். எனவே கடவுளின் அனுக்கிரகம் பெற்று சில புதிய சக்திகளை அடைந்து வாருங்கள். இதற்கு உங்களுக்கு ஒரு வருட காலம் அவகாசம் அளிக்கிறேன்,'' என்றான்.

குணசீலனும், ஜெயசீலனும் அதனை ஏற்று தலைநகருக்கு அருகே உள்ள காட்டிற்குச் சென்று கடவுளை நோக்கித் தவம் செய்தார்கள். ஒரு வருடம் முடியும்போது கடவுள் அவர்களின் முன் தோன்றி, ''உங்களுக்கு என்ன வரம் வேண்டும்?'' என்று கேட்டார்.

குணசீலன் அவரிடம், ''என் நாட்டில் மக்கள் யாவரும் சுகமாக இருக்க வரம் அளியுங்கள்!'' என்று வேண்டினான்.

கடவுளும் ''பக்தா! நீ எப்படிப்பட்ட சிக்கலான பிரச்சினைக்கும் தீர்வு காணும் அரிய சக்தியைப் பெறுவாய். உன் நாட்டில் காலா காலத்தில் மழை பெய்யும். மக்களும் நோய் நொடிகள் பீடித்தாலும் தக்க வைத்தியர்களால் குணமடைவார்கள். இவை யாவும் நீ நாட்டின் மன்னனான பிறகே நடக்கும்,'' என்றார்.

அதன்பின் ஜெயசீலனிடம் அவன் என்ன வரத்தை விரும்புகிறான் என்று கேட்கவே, அவனும் ''என் நாட்டு மக்கள் நான் கூறுவதை வேதவாக்காக ஏற்று அதன்படி நடக்க வேண்டும். என்னை எதிர்ப்பவர்களை அடியோடு அழிக்கும் சக்தி எனக்குக் கிடைக்க வேண்டும். நானும் என்னை நம்பியவர்களும் எப்போதும் சுகவாசிகளாகவே இருக்க வேண்டும்,'' என்று கேட்டான்.

கடவுளும், ''நீ விரும்பியபடியே நடக்கும். ஆனால் நீ மன்னனானால் தான் இந்த வரம் பலிக்கும்,'' என்று கூறிவிட்டு மறைந்தார்.





குணசீலனும் ஜெயசீலனும் தலை நகருக்கு வந்து தீரசிம்மனிடம் தாம் பெற்ற சக்திகளைக் கூறினார்கள். அவனும் அவர்கள் கூறியதை கவன மாகக் கேட்டுவிட்டு ''இப்போதும் நீங்கள் இருவரும் சமநிலையிலேயே இருக்கிறீர்கள். ஆனால் நீங்கள் பெற்ற சக்திகள் நீங்கள் ஒரு நாட்டின் மன்னனாக ஆன பிறகு தான் பலிக் கும். எனவே நான் கடவுளை வேண்டி உங்கள் சக்திகளை எவ்வாறு பயன் படுத்திக் கொள்வது என்ற கேட் கிறேன். அதுவரை நீங்கள் மக்களி டையே சென்று அவர்களுக்கு நீங்கள் என்னென்ன செய்யப்போகிறீர்கள் என்பதை எடுத்துக் கூறுங்கள்!'' என்று சொன்னான்.

அதன்படி அவர்கள் இருவரும் மக்களிடையே போய்ப் பேசலா னார்கள். தீரசிம்மனோ காட்டிற்குப் போய் கடவுளைக் குறித்து மூன்று மாதங்கள் தவம் புரிந்தான்.

கடவுளும் அவன் முன் தோன்றி ''பக்தா! குணசீலன் நல்லவன். ஜெயசீலன் கெட்டவன். அதனால் தான் தம் இயல்புகளின்படி வரங் களைக் கேட்டார்கள். என்னை வழி பட்டு வரம் கேட்டால் கொடுக்காமல் இருக்க முடியாதே! அதனால் தான் அவர்கள் மன்னர்களான பிறகே வரங்கள் பலிக்கும் என்றேன். எனவே அவர்களை மக்கள் விரும்பினால் மன்னர்களாக இருக்கட்டும். குண சீலனை விரும்பும் மக்கள் வாழும் பகுதியை ஒரு நாடாகவும், ஜெய சீலனை விரும்புவோர் வாழும் பகுதியை மற்றொரு நாடாகவும் உன் நாட்டைப் பிரித்து அவர்களை அந் தந்தப் பகுதிகளின் மன்னர்களாக ஆக்கிவிடு. மக்களே இப்பிரச்சினை யைத் தீர்த்துக் கொள்ளட்டும்!'' என்று கூறிவிட்டு மறைந்து போனார்.

மன்னன் தன் நாட்டைப் பிரித்த போது குணசீலனை விரும்பிய மக்கள் வாழும் பகுதி பெரிதாகவும் ஜெய சீலனை விரும்பிய மக்கள் வாழும் பகுதி மிகச் சிறியதாகவும் இருந்தது. தீரசிம்மன் அவ்விரு பகுதிகளையும் தனி நாடுகளாக்கி குணசீலனைப் பெரிய நாட்டின் மன்னனாகவும் ஜெயசீலனைச் சிறிய நாட்டின் மன்னனாகவும் ஆக்கினான்.

வேதாளம் இக்கதையைக் கூறி, ''மன்னா! குணசீலனையோ அல்லது ஜெயசீலனையோ மன்னனாக்க தீர சிம்மன் தானே முடிவு செய்யாமல்

ஏன் தவம் செய்தான்? மக்கள் நலனை விரும்பிய குணசீலனையே அவன் நாட்டின் மன்னனாக்கி இருக்க லாமே! ஆனால் ஏன் அதைச் செய்ய வில்லை? ஜெயசீலனோ யாரையும் மதிக்காதவன் என்பதும் எல்லோ ரையும் அடக்கி ஆள சக்தி பெற்றவன் என்பதும் மன்னனுக்குத் தெரிந்தது தானே! அப்படி இருக்கையில் ஜெய சீலனை ஒதுக்கிவிட்டு குணசீலனை மன்னன் ஆக்காமல் ஏன் தவம் செய்யச் சென்றான்? இக்கேள்வி களுக்குச் சரியான விடைகள் தெரிந் திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்குநூறாகி விடும்!'' என்று கூறியது.

விக்கிரமனும், ''நாட்டு மக்கள் சுகமாகவும் இருக்க வேண்டும். அவர் கள் நல்வாழ்வு வாழ தொழில்கள், வர்த்தகம், விவசாயம், கல்வி முதலிய துறைகளில் நாடு முன்னேற நட வடிக்கைகளை மேற்கொள்ள வேண் டும். இவற்றை மட்டும் செய்து விட்டால் போதாது.

நாட்டில் குழப்பம், கலகம், சதி போன்றவற்றை அடக்கும் திறமை பெற்றிருக்க வேண்டும். எதிரிகளின் படையெடுப்பை நன்கு சமாளிக்க வேண்டும். வீரத்துடன் அவர்களை எதிர்த்து, தோற்கடித்து நாட்டை விட்டே விரட்ட வேண்டும். எதிரி களின் தொல்லைகள் இல்லாமல் இருக்க வேண்டும்.

குணசீலன் மக்கள் சுகமாக இருக்க வரம் பெற்றான். ஜெயசீலனோ நாட்டின் எதிரிகளை ஒழிக்க வரம் பெற்றான். இருவரும் ஆளுக்கு ஒரு நன்மை பயக்கும் வரம் பெற்றிருந் தார்கள். ஆனால் இருவரையும் மன் னர்களாக ஆக்க முடியாதே! அதனால் தான் மன்னன் தீரசிம்மன் நாட்டை ஆளும் பொறுப்பைத் தீர்மானிக்க கடவுளைக் குறித்துத் தவம் புரிந்தான். அவர் காட்டிய வழியையும் பின் பற்றினான். எனவே அவன் இப்படிச் செய்தது மிகவும் சரியே!'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலை யவே, அவன் சுமந்து வந்த உடலுடன் வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# தேவர்கள் கிழவர்களாகினர்!



துர்வாச முனிவர் முன்கோபத்திற்குப் பெயர் போனவர். தனக்குக் கோபம் உண்டாக்கியவரைச் சபித்து விடுவார். அவரது சாபத்தை யாராலும் விலக்க முடியாது. ஏன், அவரால் கூட முடியாது தான். கொடுத்த சாபத்தைச் சற்று மாற்றவோ அல்லது அதன் கடுமையைக் குறைக்கவோ தான் அவரால் முடியும். முடிவில் அச்சாபம் ஒரு நல்ல வரமாகிவிடும்.

பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மூவரும் கடவுள்களாகக் கருதப் படுகிறார்கள். தேவலோகத்திலுள்ள மற்றவர்கள் தேவர்கள் எனப்படுகிறார்கள். இவர்களால் மக்களுக்கு நன்மைகள் ஏற்படும். நல்லவர்களாகக் கருதப்படும் இவர்களுக்கும் கொடியவர்களான ராட்சஸர்களுக்கும் அடிக்கடி போர்கள் மூண்டு வந்தன. ராட்சஸர்களால் யாவருக்கும் துன்பங்களே ஏற்பட்டன.

தேவர்களின் தலைவன் தேவேந்திரன் ஆவான். தேவர்கள் முதுமை அடையாமலும், மரணம் எய்தாமலும் 'அமரர்கள்' என்று நிரந்தரமாக இருந்தார்கள்.

ஒருமுறை துர்வாசர் தேவர்களைப் பார்க்க தேவலோகத்திற்குச் சென்றார். தேவலோகப் பேரழகி ஊர்வசி அவரைத் தகுந்த மரியாதைகள் செய்து வரவேற்றாள். அவருக்கு அழகிய மலர் மாலையை அளித்தாள். அது மிகவும் நேர்த்தியாகவும் நறுமணம் மிக்கதாகவும் இருந்தது.

துர்வாசர் அதனை மிகவும் விரும்பியபோதிலும் பற்றற்ற முனிவராக

- பாரதீயன் -

இருந்ததால் அதனைத் தானே வைத்துக் கொள்ள விரும்பவில்லை. அதனை எடுத்துக் கொண்டு தேவேந்திரனைக் காண இந்திர சபைக்குச் சென்றார். அவர் தனக்குக் கிடைத்த மாலையை தேவேந்திரனுக்குக் கொடுக்கவே, அவனும் அதைப் பெற்றுக் கொண்டு மிகவும் மகிழ்ந்து போனான்.

இதன் பிறகு துர்வாசர் தேவ லோகத்திலிருந்து பூலோகத்திற்குப் புறப்படவே, இந்திரனும் அவரை வழியனுப்பி வைத்தான். பிறகு அவன் தன் வாகனமாகிய ஐராவதம் என்ற யானையை அணுகினான். அப்போது அவன் தன் கையில் இருந்த மாலையைத் தன் யானைக்கு அணிவித்தால் அது மிகவும் அழகாக விளங்கும் என எண்ணி துர்வாசர் கொடுத்த மலர் மாலையைத் தன் யானைக்குப் போட்டான். அந்த மாலை ஐராவதத்தின் தலை மீது இருந்தது.

மலர் மாலையின் நறுமணத்தால் வண்டுகள் வந்து ரீங்காரமிட்டு அம் மாலையை மொய்க்கலாயின. வண்டுகள் ஐரா வதத்தின் தலையின் மீது உட்கார்ந்து தொல்லை கொடுத்தன. அதனால் ஐராவதம் கோபம் கொண்டு தலையை ஆட்டி மலர் மாலையைக் கீழே விழ வைத்து, அதைத் தன் காலால் மிதித்து நசுக்கியது. இந்த சம்பவம் துர்வாசருக்குத் தப்பும் தவறுமாகத் தெரிவிக்கப்பட்டது.

அதைக் கேட்ட துர்வாசர் கடும் கோபம் கொண்டார். இந்திரன் வேண்டுமென்றே இப்படிச் செய்து அவமானப்படுத்திவிட்டான் என



எண்ணி ஆத்திரம் கொண்டார்.

அந்தக் கோபம் இந்திரன் மீது மட்டும் அல்ல, எல்லா தேவர்கள் மீதும் ஏற்பட்டது. அதனால் அவர் ''தேவர்களே! நீங்கள் மரணமே இல்லை என எண்ணி இறுமாப்பு கொண்டு, இளைஞர்கள் செய்யும் துடுக்கான செயல்களை எல்லாம் செய்கிறீர்களா? நீங்கள் எல்லோரும் இப்போதே மானிடர்களைப் போல கிழவர்களாக ஆகிவிடுங்கள். உங்கள் சக்திகளை எல்லாம் இழந்து நாளடைவில் இறந்தும் போவீர்கள்!'' என்று சபித்துவிட்டார்.

இதைக் கண்ட பல முனிவர்கள் துர்வாசரிடம், ''ஐயோ! இதென்ன இப்படிச் செய்துவிட்டீர்கள்? அக்னி, வருணன், வாயு போன்ற தேவர்கள் தம் சக்திகளை இழந்துவிட்டால் உலகம் எப்படி வாழும்? ராட்சஸர்கள் அட்டகாசம் அதிகரித்துவிடுமே. எல்லா லோகங்களும் அழிந்துவிடுமே! சாபத்தை மாற்றுங்கள்!'' என வேண்டினார்கள்.

துர்வாசரும் கோபம் தணிந்து, ''தேவர்கள் பாற்கடலைக் கடைந்து அமிர்தம் பெற்று அதைப் பருகட்டும். அப்போது அவர்களுக்கு சக்தி கிடைக்கும். முன்பு இருந்தது போலவே எப்பொழுதும் இளமையுடன் இருப்பார்கள். அவர்களுக்கு மரணமே ஏற்படாது,'' என தன் சாபத்தின் கடுமையைக் குறைத்தார்.

தேவர்களும் பாற்கடலைக் கடையத் தீர்மானித்தார்கள். அதனால் அமிர்தத்தை ராட்சஸர்களுக்கும் கொடுப்பதாக ஆசை காட்டி தேவர்கள் அவர்களது உதவியோடு பாற்கடலைக் கடைந்தார்கள்.

ஐராவதம் தன்னால் தானே தேவர்களுக்குக் கஷ்டம் ஏற்பட்டது என எண்ணிப் பாற்கடலில் அமிழ்ந்து மூழ்கியது. ஆனால் அக்கடல் கடையப்பட்ட போது, முன்பு கருப்பாக இருந்த ஐராவதம் வெள்ளை நிறத்தில் வெளியே வந்தது. பிறகு அது முன்புபோல இந்திரனின் வாகனமாக இருந்து வரலாயிற்று.



# உலகமே ஒரு நாடக மேடை!



பி. பவன்குமார்,
பெல்லாரி



அர்ச்சனா ஜகதப்,
சாங்கிலி



தர்பாரில் யாவரும் மௌனமாக இருந்தார்கள். மருத நாட்டு மன்னன் மகேந்திரவர்மன், அவனது மகன் விஜயாதித்தன், அமைச்சர் மதிவாணர் ஆகியோர் வீற்றிருந்தார்கள். மன்னன் தன் மகன் விஜயாதித்தனுக்கு அரசுப் பட்டம் கட்ட விரும்பினான். ஆனால் அரசகுமாரனோ அதற்குச் சம்மதிக்கவில்லை.

மன்னனோ விடாமல், ''நீ ஏன் சம்மதிக்க மாட்டேன் என்கிறாய்?'' என்று கேட்டான். விஜயனும், ''தந்தையே! அரசியல் நிறைந்த ஆட்சிப் பொறுப்பை ஏற்க நான் விரும்பவில்லை. நான் ஒரு நடிகனாக ஆக ஆசைப்படுகிறேன்,'' என்றான். அதைக் கேட்ட மன்னன், ''இப்படி நீ செய்ய வேண்டிய கடமையை உதறி எறிந்துவிடக் கூடாது. க்ஷத்திரியர்களின் கடமை நாட்டை ஆள்வதே. உனக்கு எப்படி நடிகனாக வேண்டும் என்ற ஆசை தோன்றியது? மிகவும் ஆச்சரியமாக இருக்கிறதே!'' என்றான்.

விஜயாதித்தனும், ''நடிப்புக் கலை ஒருவனை அதிசய உலகிற்குக் கொண்டு செல்கிறது. மேடையில் நடித்து மக்கள் மனதைக் களிப்படையச் செய்ய வேண்டும் என்பதே என் நீண்ட கால விருப்பம். கலைமகள் கலைக் கூடத்தில் சேர்ந்துவிடவே நான் ஆசைப்படுகிறேன். அதனால் ஆட்சிப் பொறுப்பை என் தம்பி ஜெயந்தனிடம் ஒப்படைத்து விடுங்கள்!'' எனக் கூறினான்.

மன்னனோ கோபத்தோடு, ''ஏன் இப்படி அறிவை இழந்து பேசுகிறாய்?



நீ அரசனாவதற்கு நல்ல பயிற்சியைப் பெற்றவன். நீ நடிகனாகிவிட்டால் நீ கற்றுக் கொண்டது எல்லாம் வீண் தானே?'' என்றான்.

அப்போது அமைச்சர்







மதிவாணர் மன்னனைச் சாந்தப்படுத்தி, "அரசே! இளவரசருக்கு இது பற்றி நன்கு யோசித்து முடிவு எடுக்கக் கொஞ்சம் அவகாசம் கொடுக்கலாமே!" என்றார். மன்னனும் அந்த யோசனையை ஏற்றான்.

இதற்கு மூன்று நாட்களுக்குப் பிறகு அவர்கள் மூவரும் தர்பார் மண்டபத்தில் கூடினார்கள். அப்போது அமைச்சர் மதிவாணர், "இளவரசே! உம் தந்தையார் உம்மைக் கலைமகள் கலைக் கூடத்தில் சேர அனுமதிக்கிறார். ஆனால் அதற்குப் பதிலாக நீர் ஒன்று செய்ய வேண்டும்," என்றார்.

அதுகேட்டு விஜயன் மகிழ்ந்து, "சரி, சொல்லுங்கள். நான் என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டான். அதற்கு மன்னன் "வேறொன்றும் இல்லை. நீ கலைக் கூடத்திற்குப் போகுமுன் கோட்டையூர் பகுதி நிர்வாகத்தை இரண்டு நாட்களுக்கு கவனிக்க வேண்டும்," என்றான்.

விஜயாதித்தனும் "இரண்டு நாட்களுக்குத் தானே கவனிக்க வேண்டும்? அப்படியே செய்கிறேன்," எனக் கூறி விட்டு அப்போதே கோட்டையூருக்குக் கிளம்பினான். கோட்டையூரில் அவன் தன் மாளிகையிலிருந்து அலுவலகத்திற்குப் புறப்பட்டபோது ஒரு வீரன் அவனிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்தான். அதில் அவனது தாயாரைப் பாம்பு தீண்டிவிட்டதாக மன்னன் எழுதியிருந்தான்.

அதைப் படித்த விஜயாதித்தன் திகைத்து நிற்கையில் வேறொரு வீரன் வந்து, "இளவரசே! அலுவலகத்தில் தங்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்," என்று தெரிவித்தான். உடனே முகத்தில் சிரிப்பை வரவழைத்துக் கொண்டு அலுவலகத்திற்குச் சென்றான். அங்கு அவனுக்குப் பல பிரச்சினைகளுக்குத் தீர்வு காண வேண்டி வந்தது.





மறுநாள் காலையில் அவன் தோட்டத்தில் உலவிக் கொண்டிருக்கையில் ஓர் அதிகாரி, "ஐயா! நம் பகுதியில் குளங்கள் வெட்ட பத்தாயிரம் பவுன்கள் செலவு செய்ய வேண்டியுள்ளது. அதை அனுமதித்து கையொப்பம் இடுங்கள்," என ஒரு தாளை நீட்டினான்.

உடனே விஜயன் "இந்தத் தொகையைக் கொண்டு எவ்வளவு குளங்கள் வெட்டப்படும்?" என்று கேட்டான். அந்த அதிகாரியும் "இதற்கான பணம் வரிகளால் திரட்டப்படுகிறது. இந்தத் தொகையால் ஐந்து பெரிய ஏரிகளை அமைக்கலாம்," என்றான்.

விஜயாதித்தன் தனக்கு வந்த பெருங்

கோபத்தை அடக்கிக் கொண்டு "சென்ற முறை மூன்று லட்சம் பவுன்கள் பொக்கிஷத்திலிருந்து கடன் வாங்கப்பட்டதே, அது என்ன ஆயிற்று?" என்று கேட்டான். அதிகாரி திக்குமுக்காடிப் போய் பேசாமல் இருந்தான்.

அன்றிரவு விஜயனுக்கு அவனது தந்தையிடமிருந்து இன்னொரு கடிதம் வந்தது. அதில் அவனது தாய் நன்றாக இருக்கிறாள் என்றும், விஷம் இறக்கப்பட்டுவிட்டது என்றும் இருந்தது. அதைப் படித்தபின் அவன் நிம்மதியாகப் படுத்துத் தூங்கினான். ஆனால் சிறிது நேரமானதும் ஒரே கூச்சலாக இருந்தது. கொள்ளைக்காரர்கள் நகருக்குள் புகுந்துவிட்டார்கள். நகரில் கொள்ளையும் கொலைகளும் நடந்து கொண்டிருந்தன.

அதைக் கேட்ட விஜயன் 'பௌர்ணமி இரவில் தீவட்டிகளுடனா கொள்ளைக்காரர்கள் வந்திருக்கிறார்கள். கத்துக்குட்டிகள் போலிருக்கிறதே!' என எண்ணினான். உடனே அவன் அங்கிருந்து விரைந்து சென்று கொள்ளைக்காரர்களைப் பிடித்துச் சிறையில் அடைத்தான்.





மறுநாள் காலை மன்னனிடமிருந்து வந்த கடிதத்தில் அவனை உடனே மருத நாட்டிற்கு வரும்படி எழுதப்பட்டிருக்கவே, அவனும் கோட்டையூரிலிருந்து புறப்பட்டான்.

மருதநாட்டில் அமைச்சர் மதிவாணர் அவனுக்காகக் காத்திருந்தார். அவர் விஜயனிடம், "இளவரசே! இனி நீங்கள் கலைமகள் கலைக் கூடத்திற்குச் செல்லலாம்!" என்று கூறினார்.

விஜயனும் "நான் கோட்டையூர் போனதும் அரச ஆடைகளை அணிந்தேன். ஓர் அரசன் செய்ய வேண்டியதை முழுமையாகச் செய்தேன். இதற்கு ஒத்திகை, வசனம், அலங்காரம் அல்லது மேடை என்று எதுவும் தேவைப்படவில்லை. இப்போது உலகத்தைப் புரிந்து கொண்டேன்.



அரசன் முதல் ஆண்டி வரை ஒவ்வொருவரும் ஒரு கதாபாத்திரத்தை ஏற்று நடிக்கிறார்கள். எனவே நானும் இப்படியே நடிக் கிறேன். நடிகனாகி மேடையில் ஏறி நடிக்க வேண்டியது இல்லை. நவரசங்களையும் ராஜ தர்பாரில் காண்பதால் நான் என் தந்தை கூறியபடி ஆட்சிப் பொறுப்பையே ஏற்கிறேன்," என்றான்.

விஜயாதித்தன் இப்படிப் பேசியதும், அவன் மனம் மாறியது கண்டு மன்னன் மிகவும் மகிழ்ந்து போனான். அவன் அமைச்சருக்குத் தன் கண் பார்வையாலேயே நன்றி செலுத்தினான்.





# மழை வந்தது எப்படி?



சோம்நாத் பாரீக்,
ஜெய்பூர்

விக்கிரபுர மன்னன் விக்கிரமபானு எப்போதும் கேளிக்கைகளில் மூழ்கி இருந்ததால் நாட்டைப் பற்றிக் கவலைப்படவே இல்லை. நாட்டின் நிலை என்ன என்பது அவனுக்குத் தெரியாமலே இருந்தது.

ஒருநாள் மக்கள் உணவு கிடைக்காமல் சாகிறார்கள் என்று யாரோ அவனிடம் சொன்னார்கள். அவன் உடனே அமைச்சரை அழைத்து, ''நாட்டின் உணவு தானியங்கள் எல்லாம் என்ன ஆயிற்று?'' என்று கேட்டான்.

அமைச்சரும் ''அரசே! மழை பெய்யவில்லை. அதனால் பயிர்கள் விளையவில்லை. அதனால் மக்களுக்கு உணவு தானியங்கள் கிடைக்கவில்லை,'' என்றார்.



அப்போது மன்னன் ''மழை ஏன் பெய்யவில்லை?'' என்று கேட்கவே, அவரும் ''இங்கு மேகங்கள் குளிர்ந்து மழை பெய்வதில்லை!'' என்றார். மன்னனும் ''மேகங்கள் ஏன் குளிரவில்லை? அப்படியானால் மழையை இங்கே எப்படிக் கொண்டு வருவது?'' என்று கேட்க, அமைச்சர் பதில் கூறாமல் இருந்தார்.

அதைக் கண்ட மன்னன் ''அமைச்சரே! மழை பெய்ய வழி சொல்பவருக்கு ஆயிரம் பவுன்கள் அளிக்கப்படும் என நாடு முழுவதும் அறிவியுங்கள்!'' என்றான். அவ்வாறே பறை சாற்றப்பட்டது.



யாருக்கும் அதற்கான வழி தெரியவில்லை.

ராமு என்ற குடியானவன் தன் நிலத்தில் மரம் செடிகளை வளர்த்து சோலையாக்கிப் பச்சைப்பசேலென வைத்திருந்தான். செடி கொடி மரங்களுக்கு தினமும் கிணற்றிலிருந்து நீர் இறைத்துப் பாய்ச்சியதால் அந்தச் சோலை அப்படி இருந்தது.

ஒருநாள் அவன் செடிகளுக்குத் தண்ணீர் பாய்ச்சிக் கொண்டிருக்கையில் இரு கிளிகள் அங்கு வந்தன. அவை ராமுவின் பக்கத்தில் அமர்ந்து மிரள மிரளப் பார்த்தன. ஒரு கிளி அவனிடம்





கிஷோர் குமார் சிங், மயூர்பஞ்ச்

''ஐயா! தாகமாக இருக்கிறது. எங்கும் தண்ணீர் கிடைக்க வில்லை. நீங்களா வது கொஞ்சம் தண் ணீர் கொடுப்பீர் களா?'' என்று கெஞ் சிக் கேட்டது.

ராமுவும் அக்கிளி களிடம், ''எவ்வளவு தண்ணீர் வேண்டுமானாலும் குடியுங் கள்!'' எனவே, அக்கிளிகளும் நீரைப் பருகிவிட்டு தமக்குள் பேசிக் கொண் டன. ஒரு கிளி மற்றதிடம், ''என்ன பரிதாப நிலை பார்த்தாயா? தண்ணீர் கிடைப்பது கூட அரிதாகிவிட்டதே!'' என்றது.

அதற்கு மற்ற கிளி, ''ஏன் இப்படி நடக்காது? காடுகளோ, நிறைய மரங் களோ இல்லாத பகுதிகளில் மேகங்கள் நிலை கொள்ளாமல் போய்விடு கின்றன. நிலத்தடி நீரை இழுத்து மரம் செடிகளை வளர்க்க வேர்கள் இல் லாததால் நீர் வற்றிக் கீழே போய் விடுகிறது. இந்த சோலையைப் பார். ஏன் பச்சைப்பசேலென்று உள்ளது? ஏனெனில் இதன் சொந்தக்காரன் தின மும் இதற்கு நீர் பாய்ச்சி நன்கு வளர வைக்கிறான்,'' என்றது.

அதைக் கேட்ட முதல் கிளி, ''அப் படியானால் நிறைய மரங்கள் நட்டும், காடுகளை அழிக்காமல் அடர்த்தியாக வும் வைத்திருந்தால் நல்ல மழை பெய்யும் என்று சொல்கிறாயா?'' எனக் கேட்டது. அதற்கு மற்ற கிளி, ''ஆம்! அதில் என்ன சந்தேகம்? இவ்வாறு செய்தால் நாட்டில் வறட்சி நிலை நீங்கி மழை பெய்து எங்கும் பசுமை இருக் கும்,'' என்றது.

இதைக் கேட்ட ராமு உடனே தலை நகருக்குப் போய் மன் னனைக் கண்டு கிளிகள் பேசியதைக் கூறினான்.

மன்னனும், ''பேஷ்! மழை பெய்வதற்கான வழியைக் கூறி விட்டாய். உனக்கு ஆயிரம் பவுன்களை அளிக்கிறேன்,'' எனக் கூறிப் பணத்தைக் கொடுத்தான்.

அதன்பின் நாட்டிலுள்ள ஒவ்வொரு ஆணும் பெண்ணும் தினமும் ஒரு மரம் வீதம் நட்டுவர வேண்டும் என்று கட்டளை இட்டான்.

மக்களும் மன்னனின் கட்டளை நாட்டிற்கு நன்மை செய்வதே என எண்ணி அதன்படி நடந்தார்கள். மரங் கள் வளர காடுகள் பெருக நாட்டில் மழை பெய்தது. வறட்சி நிலை மறைந்து எங்கும் பசுமை நிறைந்தது.





# போதும் என்ற மனமே...!




பி. கவிதா,
மதுரை

பனிரெண்டாம் வகுப்பில் படிக்கும் அஜயும் விஜயும் ஏழைக் குடும்பத்தில் பிறந்தவர்கள். அவர்கள் நன்கு படித்து முன்னுக்கு வந்து தங்களை முதுமையில் நன்றாகக் கவனித்துக் கொள்வார்கள் என்று அவர்களது பெற்றோர் எண்ணி மகிழ்ந்து கொண்டிருந்தார்கள்.

ஆனால் அஜயும் விஜயும் நேர் மாறான இயல்பு கொண்டவர்கள்.



அஜய் தனக்குக் கிடைத்ததைக் கொண்டு திருப்தி அடைந்துவிடுவான். விஜயோ எது கிடைத்தாலும் அதற்கும் உயர்வாக வேறொன்று கிடைக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பான். இட்டிலி கிடைத்தால் தோசை, தோசை கிடைத்தால் பூரி, பூரி கிடைத்தால் பொங்கல் கிடைக்காதா என்று அவன் மனம் தாவிக் கொண்டே இருக்கும்.



ஒருநாள் விஜய் அஜயிடம், ''நானும் அந்தப் பையன்களைப் போல தினமும் பள்ளிக்கு ஆட்டோ ரிக்ஷாவில் போகப் போகிறேன்,'' என்றான். அஜயோ, ''வேண்டாம் விஜய்! நாம் ஏழைகள். நம் பெற்றோர்களால் ஆட்டோவிற்குப் பணம் கொடுக்கவும் முடியாது. மேலும் நீ காட்டிய ஆட்டோவில் செல்லும் பையன்கள் எல்லோரும் பணக்காரர்கள். பல கெட்ட பழக்கங்களுக்கு ஆளானவர்கள். நீ அவர்களோடு சேர்ந்து போனால் நாளடைவில் கெட்டுப் போய்விடுவாய். அதனால் இந்த ஆசையை விடு!'' என்றான்.

விஜயோ, ''நான் ஆட்டோவில் போனால் தான் என் மதிப்பு உயரும். நான் இனி உன்னுடன் நடந்து பள்ளிக்குச் செல்லமாட்டேன்,'' என்றான். அன்றே அவன் அழுது அடம் பிடித்துத் தன் தந்தையிடம் கூறி தினமும் பள்ளிக்கு ஆட்டோவில் போக ஏற்பாடு செய்து கொண்டான்.

இப்போது அவனுக்குப் புது நண்


கிஷோர் குமார் சிங், மயூர்பஞ்ச்

பர்கள் கிடைத்து விட்டனர். அதனால் அவன் அஜயை ஒதுக்கிவிட்டான். அஜயோ தன் நண்பன் கெட்டுவிடப் போகிறானே என்று கவலைப்பட்டான்.

விஜய் செல்லும் ஆட்டோவில் செல்லும் மற்ற பையன்கள் சிகரெட் பிடிப்பவர்கள். மது அருந்துபவர்கள். போதை மருந்திற்கு அடிமையானவர்கள். சிறு திருட்டுகள், ஜேப்படி என்றெல்லாம் செய்பவர்கள். இதை எல்லாம் அஜய் விஜயிடம் கூறியபோது அவன் ''எனக்குப் பணக்கார சிநேகிதர்கள் கிடைத்துவிட்டார்களே என்று நீ பொறாமைப்பட்டுத் தானே இப்படி எல்லாம் சொல்கிறாய். உன் உபதேசம் ஒன்றும் வேண்டாம், போ!'' எனக் கூறினான்.

அஜய் ''எல்லாம் உன் தலை விதி!'' என்று கூறிவிட்டுச் சென்றான். விஜயோ தன் புது நண்பர்கள் இழுத்துச் சென்ற இடங்களுக்கெல்லாம் சென்றான். பள்ளிக்குப் போவதாக அவன் தன் வீட்டில் சொல்லிவிட்டு அங்கு போகாமல் தன் புது நண்பர்களுடன் ஊர் சுற்றலானான். சிகரெட் பிடித்தல், மது அருந்துதல், போதை மருந்தை உட்கொள்தல் முதலிய கெட்ட பழக்கங்களுக்கு அடிமையானான். இவற்றிற்குத் தேவைப்படும் பணத்தைத் திருடலானான்.

ஒருநாள் விஜய் தன் நண்பர்களோடு பஸ் நிற்கும் இடத்தில் ஒரு கிழவியைச் சூழ்ந்து கொண்டு அவளது பணப்பையைத் திருட முயலவே, அவள் அவன் கையைப் பிடித்துக் கொண்டு 'திருடன்! திருடன்!!' என்று கத்தினாள். உடனே அங்கே இருந்தவர்கள் விஜயையும், ஓட முயன்ற அவனது நண்பர்களையும் பிடித்து அடித்து உதைத்தனர். காயப்பட்ட அவர்கள் வலி பொறுக்காமல் அலறினார்கள்.

அஜய் தன் நண்பன் அடிபட்டுக் கிடப்பதைக் கேட்டதும், விஜயின் பெற்றோர்களிடம் விவரம் கூறி, அவர்களையும் அழைத்துக் கொண்டு ஓடி வந்தான். அவனுக்கு ஆறுதல்



கூறியபோது விஜய், ''அஜய்! உன் பேச்சைக் கேட்டிருந்தால் எனக்கு இந்த கதி வந்திராது. இனி இருப்பது போதும் என்ற மனத்தோடு இருப்பேன்!'' எனக் கண்ணீர் உதிர்த்தவாறே கூறினான்.





# விபத்து விலகியது!





அருந்ததி சர்கார்,
கோல்கத்தா

ரியா தான் வளர்க்கும் 'போங்கோ' என்ற நாய்க்குட்டியைக் கடிந்து கொண்டிருந்தாள். ஏனெனில் கொசுக் களையும் ஈக்களையும் மற்ற பூச்சி களையும் விரட்ட ஒரு மருந்தைக் கண்டுபிடிப்பதில் முழு கவனத் தையும் செலுத்திக் கொண்டிருந்த போது தான் அந்த நாய்க்குட்டி சோதனைப் பொருள்கள் இருந்த இடத்தில் ஓடி அவற்றைக் கலைத்து விட்டது.



தன் வீட்டிலேயே ரியா ஒரு சிறு சோதனைக் கூடத்தை அமைத்து அதற்குள் அவள் யாரையும் அனு மதிக்காமல் இருந்தாள். ஆனாலும் அந்த நாய்க்குட்டி எப்படியோ நுழைந்துவிட்டது.

ரியாவிற்கு விஞ்ஞானத்தில் ஆர் வம் அதிகம். குறிப்பாக மின்சாதனங் களைப் பற்றி நன்கு தெரிந்து வைத் திருந்தாள். அவளுடைய அண்ணன் பிஜு அவளை 'மாபெரும் விஞ் ஞானியாரே!' என்று கேலி செய்த போதிலும் அவள் அதைப் பொருட் படுத்தாமலேயே இருந்து வந்தாள்.

ரியாவின் பிறந்த நாள் வந்தது. அது மழைக்காலம். அவளது நண்பர்கள் தம் வாழ்த்துக்களைத் தெரிவிக்க அவளது வீட்டிற்கு வந்தார்கள். அப்போது அவளது



தாயார் தொலைக் காட்சிப் பெட்டி யின் முன் அமர்ந்து ஏதோ ஒரு தொடர் கதையைப் பார்த்துக் கொண்டிருந் தாள். ரியாவும் அவளது நண்பர்களும் ஆடல் பாடல்களில் மூழ்கி இருந் தார்கள். பின்னர் 'கேக்' வெட்டப் பட்டது. ஒவ்வொருவருக்கும் ஒரு கேக் துண்டோடு குளிர்பானமும் கொடுக்கப்பட்டது. அப்போது பலத்த மழை பிடித்துக் கொண்டது. எல்லோருக்கும் தம் வீடுகளுக்கு எப்படிப் போவது என்ற கவலை வந்துவிட்டது.

ரியாவோ ன் தாயாரைப் பார்த்து, ''அம்மா! மழையின்போது டி.வி.






கே. ஸ்ரீராம்,
ராஜமுந்திரி

யைப் பார்க்காதே! அணைத்து அதன் இணைப்பை எடுத்துவிடு!'' என்றாள். ஆனால் அவளது தாயார் தொடர்கதையைப் பார்த்து ரசித்துக் கொண்டிருந்தாள்.



ஓர் இடி சத்தம் கேட்டது? உடனே ரியா, ''அம்மா! டி.வி.யை அணை. இடி இடிக்கும்போது அதன் பக்கத்தில் இருக்காதே! அதன் மின் இணைப்பைத் துண்டித்துவிடு!'' என்று உரக்கக் கூவினாள். அப்போது மிக பலத்த இடிச்சத்தம் கேட்டது. கூடவே ரியாவின் அம்மா அலறும் சத்தமும் கேட்டது.

அந்த அலறல் கேட்டு ரியாவும் அவளது தந்தையும் ஓடி வந்தார்கள். ரியாவின் தந்தை தம் மனைவியை மின் தொடர்பிலிருந்து இழுக்கப் போனார்.



அப்போது ரியா, ''அப்பா! அம்மாவைத் தொடாதீர்கள்! அம் மாவைத் தாக்கியுள்ள மின்சாரம் உங்களையும் தாக்கிவிடும்,'' என்று கூறியவாறே ஒரு மரக்கட்டையால் தன் தாயாரின் கையை அடித்தாள். அதனால் அவளது தாயாரின் கை மின்தொடர்பில் இருந்து விடுபட்டது.

அப்போது ரியா, ''மழையின் போது டி.வி.யின் முன் உட்கார்ந்து பார்க்கக் கூடாது. அதன் மின் தொடர்பைத் துண்டித்துவிட வேண்டும். இடி இடிக்கும்போது டி.வி.யைத் தொடக் கூடாது. அப்படித் தொட்டால் மின்சாரம் தொடுபவரின் உடலில் பாய்ந்து ஆபத்தை விளைவிக்கும். நல்லவேளை அம்மாவுக்கு ஆபத்து இல்லை, அதிர்ச்சி தான்!'' என்று கூறி, அவளை வேறு அறைக்குக் கூட்டிச் சென்று இளைப்பாறச் செய்தாள்.



ரியாவின் தோழியும், ''இடி பாய்ந்தால் தொலைக்காட்சிப் பெட்டியே நாசமாகிவிடும். எனவே முன்னெச்சரிக்கையாக பலத்த மழை பெய்யும் போதே டி.வி.யின் மின் தொடர்பைத் துண்டித்துவிடுவது தான் நல்லது. அதனால் ஆபத்திலிருந்து தப்ப முடியும்,'' என்றாள்.





# சரியான அடி!




வி. அபர்ணா,
செகந்தராபாத்

அமீர்சந்த் அந்த ஊரில் குடியானவர்களுக்கு நிலத்தின் பேரில் கடன் கொடுத்து அதைத் தனதாக்கிக் கொள்பவன். அந்த ஊரில் குடியிருக்க சம்பக் என்பவன் வந்தான். அந்த ஊரில் நிலத்தை வாங்கி விவசாயம் செய்து வாழ அவன் நினைத்தான். நிலங்கள் பற்றி விசாரிக்கையில் அமீர்சந்த் ஒருவனிடம் தான் நிலத்தை வாங்க முடியும் என்பது தெரிந்தது.

சம்பக் அமீர்சந்தைக் கண்டு பேச, அவன் எதுவுமே விளைய முடியாத நிலத்தை ஏமாற்றி அவன் தலையில் கட்ட எண்ணினான். அந்த நிலத்தை அவனுக்கு விலைக்கு விற்கவே, சம்பக்கும் விவசாயம் செய்ய நிலம் கிடைத்ததே என மகிழ்ந்து பணத்தைக் கொடுத்து நிலத்திற்கான பத்திரத்தை வாங்கிக் கொண்டு போனான்.





ஆனால் அவன் அந்த நிலத்தைப் பார்த்தபோது தான் அதில் எதுவுமே விளையாது என்பது தெரிந்தது. அதனால் அமீர்சந்தைக் கண்டு, ''நீ எனக்கு விற்ற நிலம் வெறும் பொட்டல். உன் நிலத்தைத் திரும்ப எடுத்துக் கொண்டு என் பணத்தைக் கொடு!'' என்றான். அமீர்சந்தோ, ''அதெல்லாம் முடியாது. நான் நிலத்தை விற்றாகிவிட்டது. நிலத்தை வாங்கும் நீ முதலிலேயே அதைப் பார்த்திருக்க வேண்டும்,'' என்க் கூறி அனுப்பி விட்டான்.

சம்பக் எப்படியாவது அமீர்சந்தைப் பழி வாங்க வேண்டும் என்று துடித்தான். அமீர்சந்த் மாதத்தின் முதல் செவ்வாய்க் கிழமையன்று தன் நிலங்களைப் போய் பார்த்து விட்டு வருவதை வழக்கமாகக் கொண்டிருக்கிறான் என்பதை சம்பக் அறிந்தான். அதனால் செவ்வாயன்று அவன் வந்தபோது சம்பக் தன் நிலத்தைச் சரிப்படுத்தி உழுவது போலப் பாசாங்கு செய்தான். அமீர்சந்த் அவன் வேலை செய்வதைப் பார்த்துக் கொண்டேசென்றான்.

அதற்கு அடுத்த மாதம், செவ்வாய்க் கிழமைக்கு முதல் நாள் திங்கட்கிழமை காலையில் சம்பக் அடுத்த ஊர் சந்தைக்குச் சென்றான். அங்கு நல்ல




பைசாகி பால்,
மேற்கு
வங்காளம்

கரும்பாகப் பார்த்து நிறையக் கரும்பை வாங்கிக் கொண்டு இருட்டும்போது தன் நிலத்திற்கு வந்தான். அங்கு குழிகளைத் தோண்டி கரும்புகளை நட்டும், ஒரு கட்டுக் கரும்பை வேலி ஓரமாகப் போட்டும் தன் வீட்டிற்கு வந்தான். மறுநாள் செவ்வாய்க் கிழமை சம்பக் தன் நிலத்திற்குப் போய் கரும்பை அறுத்துப் போடுபவன் போல பாவனை செய்யலானான்.

வழக்கம் போல செவ்வாயன்று தன் நிலத்தைப் பார்க்க வந்த அமீர்சந்த் அடுத்துள்ள சம்பக்கின் நிலத்தைக் கண்டு மலைத்தான். கரும்பை அறுப்பவன் போல நடித்த சம்பக் ''என்ன பார்க்கிறாய்? நிலத்தில் பாடுபட்டேன். கரும்பு நன்றாக விளைந்தது. நீயே கரும்பைப் பார்!'' என்று கூறி நாலைந்து கரும்புகளைக் கட்டிக் கொடுத்தான். அமீர்சந்தும் அவற்றை வாங்கிக் கொண்டு தன் வீட்டிற்குப் போய் சுவைத்துப் பார்த்தான். கரும்பு மிகப் பருமனாகவும், இனிமையாகவும் இருந்தது.




அவன் அந்த நிலத்தை சம்பக்கிடமிருந்து எப்படியாவது வாங்கிவிடத் தீர்மானித்தான். சாரமுள்ள நிலத்தை பொட்டல் நிலம் என நினைத்திருந்தது தவறு என்றும் எண்ணினான். அதனால் மறுநாள் அவன் சம்பக்கைக் கண்டு ''சம்பக்! உன் நிலத்தை எனக்குக் கொடு! நீ கொடுத்த விலையைப் போல இருமடங்கு பணம் தருகிறேன்,'' என்றான்.



சம்பக்கோ, ''அதை விற்க மாட்டேன். விற்றுவிட்டால் விவசாயம் செய்ய எனக்கு வேறு நிலம் இல்லையே!'' என, அமீர்சந்தும் ''இருமடங்கு பணத்தோடு நஞ்சை நிலம் ஒன்றும் கொடுக்கிறேன். எனக்கு இந்த நிலம் தான் வேண்டும்,'' என்றான். சம்பக்கும் அதற்குச் சம்மதித்து பணத்தையும், புது நிலத்திற்கான பத்திரத்தையும் வாங்கிக் கொண்டு பழைய நிலப் பத்திரத்தை அமீர்சந்திடம் கொடுத்துவிட்டான்.



அமீர்சந்த் தான் திரும்ப வாங்கிய நிலத்தில் கரும்பைப் பயிர் செய்து பார்த்தபோது அது விளையாததைக் கண்டு, ''ஆஹா! சம்பக் பழி வாங்கிவிட்டான்,'' எனக் கூறியவாறே தலையில் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்துவிட்டான்!





# குட்டி முயலின் கும்மாளம்!



பி. கார்த்திகேயன்
விஜயவாடா

ஒரு குட்டி முயல் தன் தாயுடன் ஒரு வயலின் பொந்தில் இருந்து வந்தது. ஒருநாள் அது தான் மட்டும் தனியாகவே காட்டிற்குப் போய்விட்டுத் திரும்பிவர எண்ணியது. அதன் தாயோ, ''நீயோ மிகச் சிறிய பிராணி. காட்டினுள்ளே போனால் எந்தக் கொடிய மிருகமாவது உன்னைக் கொன்று தின்றுவிடுமே!'' என்று கூறியது.

குட்டி முயலோ, ''அதெல்லாம் நான் எந்த மிருகத்திடமும் அகப்படமாட்டேன்,'' என்று கூறிவிட்டுச் சென்றது.

காட்டிற்குள் போனதும் ஒரு கரடி உறுமிக் கொண்டு வருவதைக் கண்டு அது பயந்து போயிற்று. உடனே அது உலர்ந்து கீழே கிடந்த ஒரு மரக் கிளையை எடுத்து கரடியின் மீது எறிந்துவிட்டு ஓடியது. அது கரடியிடமிருந்து தப்பி வெகு தூரம் ஓடி ஒரு மரத்தின் கீழ் தங்கி இளைப்பாறியது. அப்போது ஒரு நரி அந்த முயல் குட்டியை பார்த்துவிட்டது. அது முயல் குட்டியைப் பிடிக்க வரவே, முயல் குட்டி வேகமாக ஓடியது. வழியில் ஒரு மரத்தின் கிளையில் ஒரு தேன் கூடு தொங்கிக் கொண்டிருப்பதை கண்ட முயல் உடனே ஒரு கல்லை எடுத்து அந்தக் கூட்டின் மீது அடித்து விட்டு ஓடியது. முயல் குட்டியைத் துரத்திக் கொண்டு வந்த நரி தேன்கூட்டருகே வந்தபோது அக்கூட்டிலிருந்து கலைந்து பறந்த தேனீக்கள் நரியைக் கொட்டித் துன்புறுத்தின. முயல் குட்டி நரிக்கு அகப்படாமல் ஓடி, ஒரு மரத்தடியில் படுத்துத் தூங்கிவிட்டது.

அது கண் விழித்தபோது சில காரட்டுகள் தன் முன் இருப்பதைக் கண் டது.









பைசாகி பால்,
மேற்கு
வங்காளம்

அதற்கு ஒரே பசியாக இருந்ததால் அவற்றை உண்டது. அது உண்டபின் ஒரு குட்டி யானை தன்னருகே வந்து நின்றதைக் கண்டு அது நடுநடுங்கியது. குட்டி யானையோ அதைப் பார்த்து ''பயப்படாதே நண்பா! உன்னைத் தூக்கி என் முதுகில் ஏற்றிக் கொண்டு உன் இருப்பிடத்தில் கொண்டு போய் விட்டுவிடுகிறேன்,'' என்றது.

முயல் குட்டியும் மகிழவே, குட்டி யானை துதிக்கையை நீட்டி அதைத் தூக்கித் தன் முதுகின் மீது வைத்துக் கொண்டு, முயல் குட்டியின் இருப்பிடத்தை அடைந்தது. முயல் குட்டி பத்திரமாகத் திரும்பி வந்ததைக் கண்ட அதன் தாய், குட்டி யானைக்கு நன்றி செலுத்தியது.

முயல் குட்டி காட்டில் தன் அனுபவங்களைக் கூற, தாய் முயல் ''இந்த முறை நீ உயிர் தப்பினாய். ஆனால் எப்போதும் இப்படித் தப்ப முடியாது. தெரிந்ததா?'' என்றது.

அதற்கு முயல் குட்டியும், ''அம்மா! உன் சொல்படியே நடக்கிறேன். இனி நான் தனியாக காட்டிற்குப் போக மாட்டேன்,'' என்று கூறித் தன் தாயின் மடியில் படுத்துக் கொண்டது.



# சியவனின் இளமைப் பருவம்



புராணங்களில் கூறப்பட்ட பெரும் சக்தி வாய்ந்தவர்களில், சியவனர் தான் வயதில் மிகச் சிறியவர். இவரது தாய் புலோமை, பிருகு முனிவரின் மனைவி. அவளை ஒரு ராட்சஸன் தூக்கிச் செல்ல முயல, தனக்கு உதவுமாறு உரக்கக் கூவினாள். அப்போது சியவனர் தன் தாயின் கர்ப்பப் பைக்குள் இருந் தார். ராட்சஸன் கர்வத்தோடு புலோமையிடம், ''என்னிடமிருந்து உன்னை விடுவிக்க இங்கு யாருமில்லை, தெரிந்ததா?'' என்று கூறி அட்டகாசமாகச் சிரித்தான். அப்போது ஓர் ஒளி தோன்றி சில நொடிகளுக்கு அவனைக் குருடாக்க, சிறிது நேரம் கழித்து பார்த்தபோது தன்னெதிரே ஒரு சிறு குழந்தை நிற்பதைக் கண்டான். அவனே புலோமையின் மகன் சியவனர். தன் தாயின் கர்ப்பத் திலிருந்து வெளியே வந்து அந்த ராட்சஸனை எதிர்த்து ஓங்கி ஓர் அறை விட்டார். ராட்சஸன் கீழே விழுந்து இறந்து போனான்.





# விண்வெளியில் ஒரு மாத அனுபவம்!



பி. கார்த்திக் ராமசாமி, சென்னை

அன்று காலை நல்ல வெப்பம். என் வாழ்நாளில் சிறப்பான நாள் அது. நான் என் மாமாவுடன் விண்வெளிப் பயணத்திற்காக நாஸா விண்வெளி நிலையத்திற்குச் சென்றேன். அவர் விண்வெளி வீரர். அவருக்கு விண்



வெளி, விண்வெளிக் கப்பல் பற்றிய முழு விவரங்கள் தெரியும்.

நாங்கள் 'ஸ்பேஸ் க்வீன்' என்ற விண்வெளிக் கப்பலில் ஏறினோம். நான் கப்பலில் உள்ள எந்திர நுணுக் கங்களைக் கண்டு வியக்க, என் மாமா சில அதிகாரிகளு டன் பேசினார். சிறிது நேரத்திற் குப் பின் அவர்கள் சென்றுவிட்டார்கள். நாங்கள் விண்வெளி பயணத்திற்குத் தயாரானோம்.



விண்வெளிக் கப்பல் புறப்பட எண்ணிக்கை எண்ணுவது தொடங் கியது. கீழ்வரிசையில் எண்கள் கூறப்பட்டு இரண்டு, ஒன்று எனக் கூறப்பட்டபின் விண்வெளிக் கப்பல் உயர ஆகாயத்தை நோக்கிச் சென்றது. விரைவில் பூமியைச் சுற்றியுள்ள வாயு மண்டலத்தைத் தாண்டிவிட்டோம். சந்திரன், சூரியன் ஆகியவற்றை விண் வெளிக் கப்பலின் தடிமனான கண் ணாடி வழியாகத் தெளிவாக நாங்கள் கண்டோம். நட்சத்திரங்கள் மின்னு வதையும் கண்டோம்.

அப்போது நேரம் என் கடிகாரப் படி மாலை ஆறரை மணி. என் மாமா விண்வெளிக் கப்பலின் எல்லாப் பகுதிகளையும் காட்டி விளக்கி, அவ சர காலத்தில் பறக்க என்னென்ன கட்டுப்பாட்டு பித்தான்களைப் பயன் படுத்த வேண்டும் என்பதையும் கூறி னார். எங்களுக்குப் பசி எடுக்கவே, உணவுப் பொட்டலங்களைப் பிரித்து உண்டோம்.

தூக்கம் வருவது போல இருக் கவே, நான் படுத்துக் கொண்டேன். ஆனால் தூங்க முடியவில்லை. ஒரு

வேளை புதிய பயணம் என்பதால் தூக்கம் வரவில்லை போலும். என் மாமா படுத்துத் தூங்கிவிட, மறுநாள் என்ன செய்ய வேண்டும் என்று நான் யோசித்தவாறே தூங்கிவிட்டேன்.

நான் கண் விழித்தபோது காலை ஐந்தரை மணி. என் மாமா எனக்கும் முன் எழுந்து பூமியுடன் தொடர்பு கொண்டு செய்தி அனுப்பிக் கொண்டிருந்தார். பிறகு நாங்கள் காலைச் சிற்றுண்டியை உண்டோம். அபபோது என் மாமா ஐ.எஸ்.ஹெச். எனப்படும் அனைத்துலக விண் வெளி நிலையத்தை இன்னும் ஆறு நாட்களில் அடையப் போவதாகவும் அங்கு நாங்கள் ஒரு மாதம் தங்கி இருப்போம் என்றும் கூறினார். ஐந்து நாட்கள் கழிந்தன. ஆறாவது நாள் காலையில் அந்த விண்வெளி நிலை யத்தை அடைந்தோம்.

என் உற்சாகத்திற்கு எல்லையே இல்லை. ஆவலுடன் அங்கு இறங்கி னோம். அது ஒரு சிறிய வீடு போல இருந்தது. அதில் டி.வி., கம்ப்யூட் டர், மேஜை, நாற்காலி, சோபா என்று எல்லாமே இருந்தன. ஒரு வார கால மாக என் மாமா ஒருவரே விண் வெளிக் கப்பலைச் செலுத்தியதால் களைப்பைப் போக்க அவர் படுத்துத் தூங்கலானார்.

நான் டி.வி. முன் உட்கார்ந்து பார்த் துக் கொண்டிருந்தேன். அப்போது வெளியே மெதுவாகச் சத்தம் கேட் டது. சற்று நேரத்தில் அது பலத்த ஒலி யாகவே, நான் என் விண்வெளி ஆடைகளை எடுத்து அணிந்து கொண் டேன். அப்போது தான் எதையும் தெளிவாகப் பார்க்க முடியும். நான் உடனே வெளியே சென்று பார்த்தேன்.



அது ஒரு எரி நட்சத்திரம். அதை இருட்டில் கண்டுபிடித்துவிட லாம். அது வேகமாக இந்த விண் வெளி நிலையத்தை நோக்கி வேக மாக வந்து கொண்டிருந்தது. நான் பயந்து போய் என் மாமாவை எழுப்பி விஷயத்தைக் கூறினேன். அவர் பர



பரப்புடன் எழுந்து தொலைநோக்கி போலுள்ள ஒன்றை எடுத்தார். அதன் வழியாகப் பார்த்தபின் என்னை நோக்கிச் சிரித்தார். அது ஏன் என்று புரியாமல் விழித்தேன். அப்போது அவர், ''அது நம்மை நோக்கி வர வில்லை. நேர்எதிர் திசையில் போய்க் கொண்டிருக்கிறது. நீயே இதில் பார்!'' என்று கூறி,





என்னைத் தன் அருகே அழைத்துக் காட்ட, நானும் அதில் பார்த்து அவர் கூறியது சரியே என்றேன்.

மூன்று வாரங்கள் கழிந்தன. குறிப்பிடத்தக்கதாக எதுவும் நிகழவில்லை. நாட்கள் ஓடிவிட்டன. நாங்களும் அந்த நிலையத்திலிருந்து பூமியை நோக்கிப் பயணமானோம். விண்வெளிக் கப்பலில் மீண்டும் ஆறு நாட்கள் வாசம். அதில் நாங்கள் தூங்கினோம். அன்று விண்வெளியில் எங்களுக்கு இறுதி நாள். காலைச் சிற்றுண்டியை உண்டபின் கப்பலின் எந்திரத்தில் திடீரெனப் புகை கிளம்பி வருவதைக் கண்டேன். உடனே அந்த இடத்திற்கு ஓடினோம். முக்கிய கட்டுப்பாட்டிற்கான பித்தான் எரிந்து கொண்டிருந்தது. அது எப்படி நிகழ்ந்தது என்று நாங்கள் ஆச்சரியப்பட்டோம்.





அப்போது பூமியிலிருந்து வந்த செய்தி எங்கள் விண்வெளிக் கப்பலை ஒரு சிறு எரி நட்சத்திரம் தாக்கிவிட்டது, மேலும் நொடியில் கப்பல் முழுவதும் எரிந்து போகும் அபாயம் இருப்பதாகவும் அது எச்சரித்தது. நாங்கள் திடுக்கிட்டோம்.



என் மாமாவும் விண்வெளிக்கப்பல் வழக்கமாகச் செல்லும் வேகத்தில் போனால் இன்னும் இரண்டரை மணியில் பூமியை அடைந்துவிடலாம் என்றார்.

ஆனால் அதற்குள் நெருப்பு எங்களை எரித்துவிடுமே! நெருப்பை அணைக்க முயற்சி செய்தும் முடியவில்லை. என் மாமாவிடம் கப்பலை முழு வேகத்தில் செலுத்தும்படிக் கூறினேன். அவரும் அவ்வாறே செய்ய இன்னும் அரைமணி நேரத்தில் பூமியை அடைந்துவிடுவோம் என்ற நிலை ஏற்பட்டது.

நாங்கள் பூமியின் வாயு மண்டலத்தை அடைந்துவிட்டோம். உடனே எங்கள் பாராசூட்களை அணிந்து கொண்டு, எரியும் அந்த விண்வெளிக் கப்பலில் இருந்து கீழே குதித்தோம். அப்போது விண்வெளிக் கப்பல் படீரென வெடித்தது. பூமியில் நாங்கள் இறங்கிய இடம் சிட்னி. அங்கு எங்களுக்கு முதலுதவி அளிக்கப்பட்டது.

பிறகு நியூயார்க்கிற்குக் கொண்டு செல்லப்பட்டோம். நாஸாவில் என் மாமா நடந்ததை எல்லாம் விவரமாக அதிகாரிகளிடம் கூறினார். எங்கள் துணிச்சலைப் பாராட்டி நான் கப்பலை வேகமாக ஓட்டச் சொன்னதால் தான் இருவரும் உயிர் தப்ப முடிந்தது எனக் கூறி எனக்கு வீர விருதை அளித்தார்கள்.



# பாடப் புத்தகத்தில் அவன் கதையே!



கேரளாவைச் சேர்ந்த 13 வயதுச் சிறுவனான மாத்யூ அவன் தன் பள்ளிப் படிப்பை இத்தாலியின் ரோம் நகரில் படித்து வந்தான். அவனது தந்தை அங்கு ஒரு சிற்றுண்டி சாலையை நடத்தி வர, அவனது தாயார் ஆயுர்வேத மருத்துவராக இருந்து வருகிறார். மாத்யூ தனது ஏழாவது வயதில் தனது சமூகநூல் பாடப் புத்தகத்தில் 'மாத்யூவின் கதை' என்ற பாடத்தைப் படித்தான். அது அவன் நான்காவது வகுப்பில் படித்தபோது அவனே ஒரு பத்திரிகைக்கு எழுதியது. அதனை இத்தாலிய கல்வித் துறை தேர்ந்தெடுத்து ஏழாவது வகுப்புப் பாடப் புத்தகத்தில் சேர்த்துவிட்டது. இதை மாத்யூ இத்தாலிய மொழியில் தான் எழுதினான். ஆங்கிலம், பிரெஞ்சு, லத்தீன், ஸ்பானிய மொழிகளை அறிந்த இவனுக்கு மலையாள மொழியில் பேசத்தான் தெரியும். எழுதப் படிக்கத் தெரியாது. தற்போது இவன் கிரேக்க மொழியையும் கற்று வருகிறான்.

## தகவல் நுணுக்க ஆர்வம்




இங்கிலாந்தின் மெயிட் ஸ்டோனில் வசிக்கும் தனிநாதனின் ஆறு வயது மகள் கீதா தகவல் நுணுக்கத் துறையில் மிகவும் ஆர்வம் கொண்டவள். நமது உயர்நிலைப் பள்ளிப் படிப்பிற்குச் சமமான ஜி.சி.எஸ்.இ. யில் தேர்வு பெற்றுள்ள இச்சிறுமி தகவல் நுணுக்கத்தைத் தான் சிறப்புப் பாடமாகக் கொண்டு வாட்போர்டில் ஒன்பது மாதங்கள் பயிற்சி பெற்றாள். தமிழ்நாட்டைச் சேர்ந்த அவளது தந்தை அவள் சிறுவயது முதல் அவள் கம்ப்யூட்டரில் ஆர்வம் காட்டி வருவதையும் பல முறைகளில் அதை உபயோகிக்க எதிர்த்ததாகவும் கூறினார்.

# நம் இந்தியா

*நவம்பர் மாதத்தில் முன்னாள் பிரதம மந்திரிகளின் பிறந்த நாட்கள் வருகின்றன. நவம்பர் 14 ஜவாஹர்லால் நேரு பிறந்த தேதி. நவம்பர் 19 இந்தியாவின் முதல் பெண் பிரதம மந்திரியான இந்திரா காந்தியின் பிறந்த தேதி. இம்மாத வினாக்கள் அவர்களைப் பற்றியவை.*

1. ஜவாஹர்லால் நேரு குழந்தைகளுக்காக எழுதிய புத்தகத்தின் பெயர் என்ன?
2. 'நம் எதிர்காலத்திற்கான சோதனையைப் பல ஆண்டுகளுக்கு முன் கண்டோம். இப்போது நாம் வெற்றி பெறுவோம் என உறுதி பூணுவோம்'. இவை ஜவாஹர் லால் நேரு நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து எடுக்கப்பட்டவை. இச்சொற் பொழிவு எங்கு எப்போது நிகழ்த்தப்பட்டது?
3. ஜவாஹர்லால் நேருவிற்கு இரு சகோதரிகள் இருந்தனர். ஒருவர் இந்தியா விலேயே முதலாவது பெண் அமைச்சர். அவர் யார்? எந்த மாநிலத்தில் அமைச்சராக இருந்தார்?
4. ஜவாஹர்லால் நேரு இந்தியா சுதந்திரம் பெற்றபோது இந்திய தேசியக் காங் கிரஸின் தலைவராக இருந்தார். இது சரியா அல்லது தவறா?
5. இந்திய விடுதலைப் போரின்போது சிறுவயதில் இருந்த இந்திரா காந்தி சிறுவர் குழு ஒன்றிற்குத் தலைவியானார். அந்தக் குழுவின் பெயர் என்ன? அதன் பணிகள் யாவை?
6. இந்திரா காந்தி 1971ல் மிகவும் புகழ் பெற்றார். அது எதனால்?

*(விடைகள் அடுத்த மாதம்)*

## அக்டோபர் மாத வினாக்களின் விடைகள்

1. மைசூர் - தசரா விழாவின் கடைசி நாளில் மைசூர் மன்னர் யானை மீது அமர்ந்து ஊர்வலமாக வருகிறார்.
2. புரியின் ஜெகன்நாத ரத யாத்திரை ஜெகன்நாதர், பலராமர், சுபத்திரை ஆகியோரின் விக்கிரகங்கள் தேர்களில் வைத்து ஊர்வலமாக இழுத்துச் செல்லப்படுகின்றன. மக்கள் பயபக்தியுடன் இத்தேர்களின் வடங்களைப் பிடித்து இழுக்கிறார்கள்.
3. மகர சங்கராந்தி குஜராத்தில் பட்டங்கள் பறக்கவிட்டும், தமிழ்நாட்டில் பொங்கலிட்டும் கொண்டாடப்படுகிறது.
4. ஈத்-உல் ஜுஹா.
5. கோர்தாத் சால்.
6. மதுரை சித்திரைத் திருவிழா. மதுரைக் கோயிலில் மீனாட்சி அம்மனுக்கும் சுந்தரேசுவரருக்கும் திருமணம் நடத்தப்படுகிறது.
7. மயிலாப்பூரின் கபாலீஸ்வரர் ஆலயம். சிவபிரானின் மற்றொரு பெயர் கபாலீஸ்வரர்.
8. ஷிம்கோ.



# விநாயகர்

ஒருமுறை லட்சுமிதேவி மான சரோவரில் நீராடிக் கொண்டிருக் கையில் பார்வதி விஷ்ணுவின் உரு வில் அவளை அணுகினாள். மிக மிக அழகாக விளங்கிய மகாவிஷ்ணு வைக் கண்ட லட்சுமிதேவியின் மனம் புல்லரித்தது.

மகாவிஷ்ணுவின் வேடத்தில் வந்த பார்வதியும் லட்சுமியின் அழகில் லயித்துப் போனாள். இருவரும் கனி வுடன் ஒருவரை மற்றவர் பார்த்துக் கொண்டு அளவளாவினர். அந்த இரு பார்வைகளின் சக்தி ஒன்று சேர்ந்து மானசரோவரில் ஒரு தங்கத் தாமரை யைத் தோற்றுவித்தது. அந்த மலரில் அழகான பச்சிளம் குழந்தை ஒன்று இருந்தது.

லட்சுமிதேவி ஆனந்த வெள்ளத் தில் மூழ்கி விஷ்ணுவைக் கட்டித் தழுவினாள். அப்போது விஷ்ணுவாக இருந்த பார்வதி கலகலவெனச் சிரித்து, ''நான் உண்மையில் விஷ்ணு அல்ல பார்வதி. உன் கணவன் உரு வில் வந்தவள்,'' என்றாள்.

அப்போது விநாயகர் அவர்களின் முன் வந்து ''உங்கள் இருவரின் அம் சங்கள் கொண்ட அக்குழந்தையின் பெயர் ஜெயஸ்ரீ என்று இருக்கட்டும். பார்வதியின் ஜெயத்தையும் லட்சுமி யின் செல்வத்தையும் இது குறிக்கும். இக்குழந்தையின் கணவனும் சிவ னுக்கும் விஷ்ணுவுக்கும் பிறந்துள்ள வனே ஆவான்,'' எனக் கூறினார்.

பிறகு வாயு தேவனிடம அந்தத் தங்கத் தாமரையோடு அக்குழந் தையை காவிரி நதியில் விட்டு



வில்லையும் அம்பையும் எடுத்துக் கொண்டு அவ்வப்போது காட்டில் திரிந்து வரலானாள்.

ஹரிஹரனாகப் பிறந்த ஈசுவரன் கைலாயத்திற்குப் போய் விநாயக ரோடும் குமரனோடும் கைலாசத்தில் சுகமாக இருக்கலானார்.

ஒருநாள் மானசரோவரில் அவர் கள் நீராடிக் கொண்டிருக்கையில் விநாயகர், ''இந்த மானசரோவரில் தான் ஈசுவரருக்கு மனைவியாகப் போகும் ஜெயஸ்ரீ லட்சுமிதேவியின் சக்தியாலும் பார்வதிதேவியின் சக்தி யாலும் பிறந்தாள்,'' என்றார்.

நீராடிக் கரையேறிய பின் விநா யகர் ஈசுவரரிடம், ''சுவாமி! எங்களை விடப் பெரியவரான நீங்கள் இப்படி பிரம்மச்சாரியாக இருப்பது சரியா! விரைவிலேயே கல்யாணம் செய்து கொண்டுவிடுங்கள்!'' என்றார்.

குமரனும் அதனை ஆமோதித்துக் கூறவே, ஈசுவரனும் தலை அசைத்து, ''ஆகட்டும், அப்படியே செய்ய லாம்!'' எனக் கூறித் தன் இருப்பிட மான கைலாசம் போய்ச் சேர்ந்தார்.

ஒருநாள் ஈசுவரர் ஒரு பெரிய புலி மீது அமர்ந்து காட்டில் திரிந்து கொண்டிருந்தார். அப்போது அம்பு கள் 'விர் விர்'ரென்று வந்து அந்தப் புலியின் நாலா பக்கத்திலும் தரை மீது குத்தி புலியை நகரவிடாமல் சிறை யில் அடைத்தது போல நிற்கச் செய் தன. ஈசுவரர் அம்புகள் வந்த திசையை அனல் கக்கும் கண்களோடு பார்த்தார்.

ஆனால் மறுநிமிடமே அந்தக் கோபம் மறைந்துவிட்டது. ஏனெ

வருமாறு கூறினார். வாயுதேவனும் விநாயகரின் கட்டளைப்படி அக் குழந்தையைத் தாமரை மலரோடு காவிரி நதியில் விட்டு விட்டார்.

தங்கத் தாமரை குழந்தையுடன் காவிரியில் மிதந்து சென்றது. காவிரி பாயும் பகுதியை ஆண்ட மன்னன் ஆற்றில் வந்த குழந்தையை எடுத்து தனக்கு கிடைத்த அரிய செல்வம் எனக் கருதி வளர்க்கலானான்.

அதற்கு அவன் என்ன பெயர் வைக்கலாம் என யோசித்தபோது அசரீர வாக்கு ஒன்று ''இதற்கு ஜெயஸ்ரீ எனப் பெயரிடுங்கள்!'' என்று கூறியது. ஜெயஸ்ரீயும் வளர்ந்து பெரியவளாகி மிக அழகுடன் விளங் கினாள். அவளுக்கு அரண்மனை வாழ்வைவிடக் காட்டில் போய் இயற்கை அன்னையின் மடியில் வாழவே விருப்பம் இருந்தது. அவள்

னில் அம்பும் கையுமாக அழகி ஜெயஸ்ரீ அவர் முன் நின்றாள். மன்மத பாணம் அவர் மனதைத் தாக்கியது. ஈசுவரர் சட்டென அங்கிருந்து மறைந்துவிட்டார்.

விநாயகர் அதற்கு முன்பாகவே ஜெயஸ்ரீயின் கனவில் தோன்றி ஈசு வரரைப் பற்றிக் கூறி இருந்தார். அவரைத் தேடி ஜெயஸ்ரீ காட்டில் அலைந்து வந்தபோது தான் இவ் வாறு நிகழ்ந்தது. நாரதர் ஜெயஸ்ரீயின் தந்தையைக் கண்டு அவளது சுயம் வரத்திற்கான ஏற்பாட்டை செய்யச் சொன்னார். மன்னனும் அவ்வாறே செய்தான்.

சுயம்வரத்திற்கு மன்னர்களும், தேவர்களும் வந்தார்கள். ஈசுவரரும், சாதாரண வேட வாலிபனாக கையில் வில்லும் அம்பும் கொண்டு ஒரு கருப்பு வேட்டை நாயைப் பிடித்துக் கொண்டு சுயம்வர மண்டபத்திற்கு வந்து சேர்ந்தார்.

யாரும் அவரை மண்டபத்துள் உட்கார அனுமதிக்கவில்லை. அத னால் அவர் தலைவாசலில் நின்று உள்ளே இருப்பவர்களை எல்லாம் சிறையில் அடைத்தது போலச் செய்துவிட்டார். அவர் தம் நாயின் மீது உட்காரவே அது புலியாக மாறி பயங்கரமாக உறுமியது.

இதைக் கண்ட ஜெயஸ்ரீ வந்திருப் பது ஈசுவரரே எனத் தெரிந்து கொண் டாள். எனவே மாலையுடன் அவள் நேராக வாசலுக்குப் போய் அங்கிருந்த ஈசுவரரின் கழுத்தில் மாலையைப் போட்டு அவரைத் தன் கணவராகத்



தேர்ந்து எடுத்தாள்.

தம்மை எல்லாம் விட்டு ஜெயஸ்ரீ ஒரு சாதாரண வேடனைத் தேர்ந்து எடுத்தாளே என வந்திருந்த மன் னர்களும் தேவர்களும் ஆத்திரம் அடைந்தனர். அவர்கள் அந்த வேட வாலிபன் மீது பாய்ந்து தாக்க முயன் றார்கள். ஈசுவரர் தம் வில்லாலும் அம்புகளாலும் எல்லோரையும் எதிர்த்தார். தேவர்களும் மன்னர்களும் பிரயோகித்த அஸ்திரங்கள் எதுவும் அவரை ஒன்றும் செய்ய முடிய வில்லை. அதுகண்டு யாவரும் ''யார் அவர்?'' எனத் திகைத்து நின்றனர்.

அப்போது ஈசுவரர் தன் சுய உருவை எடுத்துக் காட்சி அளிக்கவே, யாவரும் ''ஹரஹர மகாதேவா!'' என வணங்கிக் கன்னத்தில் போட்டுக் கொண்டார்கள். ஜெயஸ்ரீக்கும் ஈசுவர ருக்கும் விமரிசையாக விவாகம்



நடைபெற்றது. அவர் ஜெயஸ்ரீயுடன் தன் இருப்பிடத்திற்கு வந்து சேர்ந்தார்.

திரேதாயுகத்தில் ஆர்யவர்த்தத்தில் கோசலன், கேகயன், வசுமித்திரன் என்ற மூன்று மன்னர்கள் இருந்தனர். மூவரும் ஆருயிர் நண்பர்கள். அவர்கள் ஒவ்வொருவருக்கும் மகள் ஒருத்தி இருந்தாள். கோசலை, கைகேயி, சுமித்திரை என்பது அவர்களது பெயர்களாகும். அவர்கள் மூவரும் தம் புதல்விகளை அயோத்தி மன்னனான தசரதனுக்கு மணமுடித்து வைப்பது எனத் தீர்மானித்து தசரதனின் அபிப்பிராயம் கேட்க, அவனும் அதற்கு இணங்கினான்.

மூன்று மன்னர்களும் ஜைமினி முனிவரை அழைத்து விவாக நாளைக் குறிக்கச் சொன்னார்கள். அவரும் முகூர்த்த நாளையும் வேளையையும் குறிப்பிட்டு ''இப்பெண்களின் திருமணம் விநாயகரின் முன் நடைபெறும். ஆனால் திருமணத்திற்கு முன் இப்பெண்களுக்கு ராட்சஸனால் ஆபத்து வரலாம். எனவே எச்சரிக்கையாக இருங்கள்!'' எனக் கூறினார்.

மூன்று மன்னர்களும் தம் புதல்விகளை ஒரு பெரிய பெட்டியில் வைத்துப் பத்திரமாக ஓரிடத்தில் வைத்தார்கள். இந்த சமயம் நாரதர் இராவணனிடம் போய், ''இராவணா! தசரதனின் திருமணம் நடக்கப் போகிறது. இந்த தசரதனுக்குப் பிறக்கப் போகும் ராமன் தான் உன்னைக் கொல்லப் போகிறான், தெரியுமா?'' என்று கலகம் மூட்டினார்.

உடனே இராவணன் அந்த மூன்று அரசகுமாரிகளையும் கவர்ந்து வந்துவிடும்படி மகோதரன் என்ற அரக்கனிடம் கூறி அனுப்பினான். மகோதரனும் அந்த அரசகுமாரிகள் இருக்கும் இடத்தைக் கண்டுபிடித்து அந்தப் பெரிய பெட்டியையே அவர்களோடு சேர்த்து விழுங்கினான். அவன் ஆகாய வழியாகக் கடலைக் கடந்து இலங்கைக்கும் செல்லலானான்.

அப்போது திடீரென அவனுக்கு வயிற்றைப் புரட்டியது. அவன் தான் விழுங்கிய பெட்டியை உடனே கக்கிவிட்டான். அது கடலில் விழுந்து அலைகளால் அடித்து ஒரு கரை ஓரம் தள்ளப்பட்டது. அப்போது தசரதன் கடல் யாத்திரை மேற்கொண்டு கப்பலில் அவ்வழியே வந்து கொண்டிருந்தான். கரையோரமாக ஒரு பெட்டி இருப்பது கண்டு அவன் அதனைத் திறந்து பார்க்கவே, அதில்

தான் மணக்க இருக்கும் மூன்று அரசகுமாரிகளும் இருப்பது கண்டு ஆச்சரியப்பட்டான்.

அந்த நாளும் வேளையும் தான் ஜைமினி முனிவர் அவர்களது திரு மணம் நடக்கக் குறித்துக் கொடுத்தது. விநாயகர் அப்போது தசரதன் முன் தோன்றி அவனுக்கும் அந்த மூன்று அரசகுமாரிகளுக்கும் விவாகத்தை நடத்தி வைத்துவிட்டு மறைந்தார். தசரதன் தன் மூன்று மனைவிகளுடன் அயோத்திக்குத் திரும்பினான்.

வெகுகாலத்திற்குப் பின் தசரத னுக்கு ராமன், லட்சுமணன், பரதன், சத்துருக்கனன் என்ற நான்கு புதல்வர் கள் பிறந்து வளர்ந்து பெரியவர் களானார்கள். கைகேயியின் வரத்தால் இராமர், லட்சுமணனுடனும் தன் மனைவி சீதையுடனும் காட்டிற்குச் சென்றார். இராவணன் சீதையைக் கவர்ந்து இலங்கைக்கு எடுத்துச் சென் றான். இராமர், அனுமார், சுக்கிரீவன் ஆகியோரின் உதவியுடன் இலங்கைக் குப் போய் இராவணனைக் கொன்று சீதையை மீட்டு புஷ்பக விமானத்தில் ஏறி சமுத்திரக் கரை ஓரம் தங்கினார். அங்கு சிவபூஜை நடத்த எண்ணி அனுமாரிடம் ஒரு சிவலிங்கம் எடுத்து வருமாறு கூறினார். அனுமாரும் கைலாசத்திலிருந்து கொண்டு வரு வதாகக் கூறிப் போனார்.

அனுமார் கைலாயத்தில் பல லிங்கங்களைக் கண்டு அவற்றில் ஒன்றை எடுக்க முயன்றார். ஆனால் அவரால் அங்கிருந்த மிகச் சிறிய லிங் கத்தைக் கூடத் தூக்க முடியவில்லை.

அவர் திகைத்து நின்று கொண்டு இருக்கையில் ஒரு சிறுவன் அவர்



முன் வந்து ''என்னய்யா, யார் நீ? அனுமானைப் போல குரங்கு சேஷ்டைகள் எல்லாம் செய்கிறாயே!'' எனக் கேட்டான்.

அனுமாரும் சிரித்தவாறே ''நீ யார் தம்பி? நான் அனுமான் தான். இங்கிருந்து ஒரு லிங்கத்தை, எடுத்துப் போக வந்தேன்,'' என்றார். அச்சிறுவனும் ''அனுமானா? பஞ்சமுக அனுமான் என்பார்களே! அது நீ தானா? எங்கே உன் மற்ற முகங்களையும் காட்டு! உனக்கு ஒரு லிங்கத்தைக் கொடுக்கிறேன். நான் இந்த லிங்கங்களுக்குக் காவல் இருப்பவன்,'' என்றான்.

அனுமாரும் கருடன், வராகம், சிங்கம், குதிரை ஆகிய தனது மற்ற முகங்களையும் காட்டினார். விநாயகரும் அனுமாருக்கு ஒரு லிங்கத்தை எடுத்துக் கொடுத்து அனுப்பினார்.

அனுமாரும் தன் சுயஉருவை அடைந்து லிங்கத்தை எடுத்துக் கொண்டு வேகவேகமாக இராமர் இருக்கும் இடத்திற்கு வந்தார். அப்போது இராமரும் சற்றுத் தாமதமாகிவிட்டதால் மணலால் லிங்கத்தை அமைத்துப் பூஜை செய்ய ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தார். அதுகண்டு அனுமார் தன் வாலால் அந்த மணலால் ஆன லிங்கத்தைக் கலைக்க முயன்றார். ஆனால் அம் மணல் லிங்கம் கரையவில்லை.

அப்போது இராமர், ''அனுமாரே! அறிவாளிகள் கூட சில சமயங்களில் மதி மயங்கிச் செயல்பட்டுவிடுகிறார்கள். லிங்கம் மணலால் ஆனது என்றாலும் அதுவும் சிவபிரான் தானே. அதனை அழிக்க முடியுமா? நீர் கொண்டு வந்த லிங்கத்தையும் இங்கு வைத்து இரண்டையும் ஒன்றாக்கி பூஜை செய்யலாம். கவலைப்படாதீர்!'' எனக் கூறி அனுமார் கொண்டு வந்த லிங்கத்தை வாங்கி மணல் லிங்கத்தோடு வைத்தார். இரண்டு லிங்கங்களும் ஒன்று சேர்ந்து ஒரே லிங்கமாகியது.

யாவரும் அதனைப் பூஜித்தனர். பின்னர் இராமர் சீதையுடனும் மற்றவர்களோடும் புஷ்பக விமானத்தில் அமர்ந்து அயோத்திக்குச் சென்றார்.





# அம்மன் அருள்!

பாலூரில் பச்சையப்பன் என்ற திருடன் இருந்தான். அவன் எப்போதாவது தான் திருடப் போவான். நாற்று நடுதல், அறுவடை மற்றும் சில கூலி வேலைகளையும் செய்து வந்தான். அவன் மனைவிக்கு அவனைப் பற்றித் தெரியும். ஆனால் அவனது ஒரே மகன் அதை அறிந்திருக்கவில்லை.

அவன் திருடப் போகுமுன் அவ்வூர் எல்லை அம்மன் கோயிலுக்குச் சென்று, ''தாயே! இன்றைய திருட்டில் எனக்குக் கணிசமான பணம் கிடைக்கச் செய். வழக்கம் போல அதில் நாலில் ஒரு பங்கை உனக்குக் காணிக்கையாகச் செலுத்துகிறேன்,'' என வேண்டிக் கொள்வான்.

அவன் திருடும் பணத்திலும், கூலி வேலையில் கிடைக்கும் பணத் திலும் நாலில் ஒரு பங்கை அந்த அம்மனுக்கு அர்ப்பணிப்பான். தன் வருமானத்தை நான்காகப் பிரித்து எல்லை அம்மனுக்கு ஒன்றும், தன் மனைவிக்கு ஒன்றும், தன் மகனுக்கு ஒன்றும், எஞ்சிய நான்காவதை தனக்கும் என ஒதுக்கிக் கொண்டு வந்தான். அவனது குடும்பம் எவ்வித சிரமமும் படாமல் நன்கு வாழ்ந்தே வந்தது.

ஒருமுறை பச்சையப்பன் தன் ஊரிலிருந்து அருகிலுள்ள நகரத்திற்குத் திருடச் சென்றான். அப்போது ஓரிடத்தில் இராமாயணத்தை எழுதிய வால்மீகி முனிவரின் வாழ்க்கையைச் சித்தரிக்கும் தெருக் கூத்து ஒன்றைக் கண்டான். வால்மீகி முனிவரும் ஆரம்பத்தில் தன்னைப் போல்த் திருடராகத்தான் இருந்தார் என்பதைக் கண்டான்.

திருடன், வால்மீகி முனிவராகி இராமாயண காவியத்தை அளித்ததை அறிந்து அவன் ஆச்சரியம் அடைந்

- பரத் வெங்கட் -



தான். தானும் திருட்டுத் தொழிலை விட்டுவிட்டால் வால்மீகி முனிவர் போலாகிவிடலாம் என்று எண்ணி னான். அவன் தன் மனதில், ''எல்லை அம்மனே! இதுதான் நான் இறுதி யாகச் செய்யப்போகும் திருட்டு. இனி நன்கு படித்துப் பண்டிதனாகி வால்மீகி முனிவர்போல் ஆகப் போகி றேன்,'' என்று வேண்டினான்.

ஆனால் திருடப் போன வீட்டில் அவன் நகரக் காவல் வீரர்களிடம் அகப்பட, அவர்கள் அவனைத் தம் மேலதிகாரி முன் நிறுத்தினர். அவர் அவனைச் சிறையில் அடைத்தார்.

ஐந்தாறு நாட்கள் ஆகியும் பச்சை யப்பன் வீடு திரும்பாததால் அவன் மனைவி, மகனுடன் எல்லை அம் மன் கோயிலுக்குச் சென்று, ''அவர் திருடன் என்றாலும் உன் பரமபக்தன் தானே! குடும்பத்திற்காகத் தான் சிறிய அளவில் திருட்டுகளைச் செய்தார். என் கணவரை என்னிடம் சேர்ப்பித்து விடு!'' என்று வேண்டினாள்.

அதைக் கேட்ட அவள் மகன் பாலு திகைத்து தன் தகப்பன் ஒரு திருடனா என்று எண்ணி ஆத்திரம் கொண் டான். அவன் வீட்டிற்குத் திரும் பாமல் கோயிலிலேயே ஒரு தூணில் சாய்ந்து வேதனைப்படலானான். நள் ளிரவாயிற்று. அம்மன் தான் தன் தந் தைக்கு எவ்வித ஆபத்தும் நேரிடாமல் பாதுகாத்து ஊர் திரும்பச் செய்ய வேண்டும் என்று பாலு தன் மனதிற் குள்ளாக வேண்டிக் கொண்டான்.

அவன் கண்களை மூடி, அம்ம னைப் பிரார்த்திக்கும்போது ஒரு கன வைக் கண்டான். கனவில் எல்லை அம்மன் ஒரு மூதாட்டி போலத் தோன்றி, ''பாலு! என் பக்தனான உன் தந்தையை இந்த அம்மன் காப்பாற்ற வில்லையே என்றெண்ணி மனதுள் திட்டுகிறாயா?'' என்று கேட் டாள். அதைக் கேட்ட பாலு, ''தாயே! அப் படி எல்லாம் இல்லை. அம்மன் அருள வேண்டும் என்று தான் வேண் டிக் கொண்டிருக்கிறேன்,'' என்றான்.

அதற்கு மூதாட்டி, ''பேஷ்! அம் மன் மீது நீ கொண்டுள்ள நம்பிக்கை பாராட்டத்தக்கதே. உன் தந்தை வால் மீகி முனிவர் போலாக ஆசைப்படு கிறான். ஆனால் விருப்பு, வெறுப்பு ஆகியவற்றை விலக்கவில்லையே. அவனுக்குக் குடும்பத்தின் மீது அக் கறை இருந்தவரை அவனது திருட்டு களை அம்மன் மன்னித்துக் கொண்

டிருந்தாள். ஆனால் வால்மீகி போல் ஆக வேண்டும் என்று எண்ணி திருடப் போனதால் தான் காவல் வீரர்களிடம் அகப்பட்டுக் கொண்டான்,'' என்றாள்.

அப்போது அவன், ''தாயே! நான் என் தாயாரைப் பாதுகாத்து வர வேண்டும். வருடம் முழுதும் கூலி வேலை கிடைக்காது. ஏதாவது வியாபாரம் செய்து பிழைக்கலாம் என்றால் வியாபாரத்தில் முதல் போடப் பணம் இல்லையே!'' என்று கண்களில் நீர் ததும்பக் கூறினான். அப்போது அந்த மூதாட்டி மறைந்து போனாள்.

பாலுவும் விடியும்வரை அங்கேயே தூங்கிக் கொண்டிருந்தான். அதிகாலையில் வேலைக்குப் செல்பவர்கள் செய்யும் சத்தம் கேட்டு அவன் கண் விழித்துப் பார்த்தான். அப்போது அவன், ''ஆகா! நேற்று என் கனவில் மூதாட்டியாக வந்தவள் எல்லை அம்மனே! அவள் அருள் எனக்கு நிச்சயம் கிடைக்கும்,'' என்று எழுந்தபோது ஒரு சிறு மூட்டை தன் முன் இருப்பதைக் கண்டான். அதை அவிழ்த்துப் பார்த்தபோது அதில் தங்க நாணயங்கள் இருந்தன. அவை அம்மன் தனக்கு அளித்தது என்று எண்ணி அதனுடன் அருகிலுள்ள நகருக்கு அவன் சென்றான்.

அங்கு மன்னனைக் கண்டு தன் தந்தை சிறைப்பட்டிருப்பதையும், தனக்கு அம்மன் தோன்றி கூறியதையும் அவன் விவரமாகச் சொன்னான். அதைக் கேட்ட மன்னன் ஆச்சரியப்பட்டு, ''பாலு! நீ நேர்மையானவன் உன் தந்தை வால்மீகி போலாக வேண்டும் என எண்ணியதில் தவறில்லை. ஆனால் கடைப்பிடித்த வழி தான் சரியில்லை. அதனால் தான் அம்மன் அவனுக்குத் தண்டனை கிடைக்கச் செய்தாள். தன் அருளையும் அளித்திருக்கிறாள்,'' எனக் கூறி, பச்சையப்பனை சிறையிலிருந்து விடுவிக்கக் கட்டளை இட்டான். நேர்மையுடன் நடந்த பாலுவுக்கும் பரிசளித்து அவனது தந்தையோடு அவனைப் பாலூருக்கு அனுப்பினான்.





# நன்றி மறந்தவன்

சிவபுரி ஜமீன்தாரரிடம் தோட்டக் காரனாக வேலை பார்த்து வந்த ஏழுமலை பாம்பு தீண்டியதால் இறந்துவிட்டான். ஜமீன்தாரர் அவ னது மனைவியையும் இரு மகன் களையும் கண்டு ஆறுதல் கூறினார்.

பிறகு ஏழுமலையின் மனைவி யிடம் அவர், ''உன் கணவன் இறந்து விட்டதால் உன் குடும்பம் நன்கு வாழ, உன் மகன்களில் ஒருவனுக்கு என் அலுவலகத்தில் வேலை போட் டுக் கொடுக்கிறேன். யாருக்கு அந்த வேலையைக் கொடுப்பது?'' என்று கேட்டார்.

ஏழுமலையின் மனைவியும், ''என் மூத்த மகன் ராமு நல்ல உழைப் பாளி. எல்லோரிடமும் நன்கு பழகு பவன். புத்திசாலி. அவன் எப்படியும் பிழைத்துக் கொள்வான். என் அடுத்த மகன் சோமுவைப் பற்றித்தான் கவ லைப்படுகிறேன். எனவே அவனுக்கு வேலை போட்டுக் கொடுங்கள்!'' என்றாள்.

ஜமீன்தாரரும் ராமுவிடம் ''ராமு! உன் தம்பிக்கு வேலை போட்டுக் கொடுக்கட்டுமா? உனக்கு ஆட்சே பணை எதுவும் இல்லையே. மூத்த மகனுக்கு வேலை கொடுப்பது தான் முறை. அதை நீ விட்டுக் கொடுத்தால் தான் உன் தம்பிக்கு நான் உத்தியோகம் கொடுக்க முடியும்!'' என்றார்.

ராமுவும் ''எனக்கு வேலை வேண் டாம். என் தம்பிக்காக விட்டுக் கொடுக்கிறேன். என் தம்பி சோமு வுக்கே வேலையைக் கொடுங்கள்!'' என்றான். ஜமீன்தாரரும் சோமுவிடம்

- பாபநாசம் சாமா -

ஐந்து நாட்களுக்குப் பிறகு வந்து வேலைக்கு வருமாறு கூறினார். அவனும் வேலையில் சேர்ந்து சுகமாகக் காலம் கழிக்கலானான்.

ராமுவோ தந்தை விட்டுப் போன உபயோகமற்ற, மேடு பள்ளமான, முட்கள் வளர்ந்து கிடந்த நிலத்தைச் சமப்படுத்தி முட்செடிகளை அப்புறப்படுத்தினான். ஊரில் சிலரிடம் கடன் வாங்கி மாங்கன்றுகளை நட்டான். அவை வளர்ந்து மரங்களாகி நிறையப் பழங்களைத் தந்தன. ராமு அவற்றை விற்று குடும்பம் நடத்திய தோடு ஐந்தாறு வருடங்களில் பணக்காரனாகி ஊரில் பெரிய மனிதர்களில் ஒருவனாகிவிட்டான்.

இதைக் கேள்விப்பட்ட சோமு பொறாமை கொண்டு ஊருக்கு வந்து தன் தாயாரிடம், ''இது என்ன அநியாயம். தகப்பனார் விட்டுப் போன நிலத்தில் எனக்கும் பங்கு உண்டு. ராமுவிடம் மாந்தோப்பில் பாதியை எனக்குக் கொடுக்கச் சொல்!'' என்றான். அவனது தாயோ பேசினால் வீண் தகராறுஎன்று எண்ணி எதுவும் கூறவில்லை. ஆனால் சோமு தன் குறையை அவ்வூரிலுள்ள கணபதி என்பவனிடம் கூறினான்.

கணபதி யாராவது இருவர் சொத்து சம்பந்தமாக சண்டை போட்டுக் கொள்கிறார்கள் என்றால் அவர்களில் ஒருவரைத் தூண்டிவிட்டு அதில் தனக்கு ஆதாயத்தைத் தேடிக் கொள்பவன். எனவே சோமுவை அழைத்துக் கொண்டு கிராம அதிகாரியிடம் போய் நியாயம் கேட்டான். கிராம அதிகாரியும் லஞ்சம் வாங்கிக் கொண்டு மாந்தோப்பு சோமுவுக்கே என்று தீர்ப்பு கூறிவிட்டார்.

இந்த அநீதியைப் பொறுக்க முடியாமல் ஏழுமலையின் மனைவி ராமுவைக் கூட்டிக் கொண்டு ஜமீன்



தாரரிடம் போய் சோமு செய்த அநியாயத்தை முறையிட்டாள்.

ஜமீன்தாரரும் சோமுவை வரவழைத்து விசாரித்தார். அப்போது அவருக்கு சோமுவின் மன இயல்பு என்ன என்று தெரிந்துவிட்டது.

அவர் சோமுவைப் பார்த்து, "உன் அண்ணன் ராமு நியாயமாகத் தனக்குக் கிடைக்க வேண்டிய உத்தியோகத்தை உனக்கு விட்டுக் கொடுத்து மாபெரும் தியாகத்தைச் செய்திருக்கிறான். அதற்கு நன்றி செலுத்தாமல் அவன் சீர்ப்படுத்தி வளர்த்த மாந்தோப்பிற்கு உரிமை கொண்டாடி, கணபதியின் உதவியோடு கிராம அதிகாரிக்கு லஞ்சம் கொடுத்து அதை அடைந்திருக்கிறாய். ராமு உழைத்து மாந்தோப்பை உருவாக்கியதோடு உழைத்து நிலம் வாங்கி முன்னுக்கு வந்திருக்கிறான். நீயோ உழைக்காமலும் பொறாமை கொண்டும் அநியாய வழியிலும் அவன் உருவாக்கிய மாந்தோப்பை அடைந்துள்ளாய். அது உன் முன்னோர் விட்டுப் போன சொத்து. எனவே அதில் பாதி ராமுவுடையது எனத் தீர்ப்பளிக்கிறேன். மேலும் நீ பிறர் வாழப் பிடிக்காதவன். லஞ்சத்தை ஊக்குவிப்பவன். அதனால் உனக்கு இனி என் அலுவலகத்தில் வேலை இல்லை. உனக்குக் கிடைக்கும் பாதி மாந்தோப்பில் உழைத்துச் சம்பாதித்துக் கொள். கணபதியும் கிராம அதிகாரியும் லஞ்சத்தில் மூழ்கியவர்கள். எனவே அவர்கள் ஐயாயிரம் ரூபாய் வீதம் அபராதம் செலுத்து வேண்டும். அது மட்டுமல்ல. தற்போதைய இந்த கிராம அதிகாரி பதவி நீக்கம் செய்யப்படுகிறான். அப்பதவி ராமுவுக்குக் கொடுக்கப்படுகிறது," என்றார்.

சோமுவுக்குத் தலையே சுற்றியது. தன் செயலின் விளைவால் தன்னுடைய வேலையும் பறிபோனதை எண்ணி மலைத்து நின்றான்.



# இதைக் கொடுக்கட்டுமா?



ஒரு ஜமீன்தாரர் வேலன், பாலன் என்ற இருவரை தன்னிடம் வேலை செய்பவர்களைக் கண்காணித்து வாரத்திற்கு ஒருமுறை அவர்கள் வேலைத் திறன் பற்றித் தமக்கு அறிக்கை அளிக்குமாறு கட்டளை இட்டிருந்தார்.

ஒரு புதன்கிழமையன்று வேலன் தன் பணியில் ஈடுபட்டிருந்தபோது பாலன் ஒரு மரத்தடியே படுத்துத் தூங்குவதைக் கவனித்துவிட்டான். அதனால் வேலன் தான் பார்த்ததை அப்படியே அன்றைய குறிப்பில் எழுதினான். பிறகு மாலையில் அவன் அந்தக் குறிப்பை பாலனிடம் காட்டினான்.

அதைப் படித்த பாலன், ''வேலா! இதை ஜமீன்தாரருக்கு அனுப்பாதே! அவர் மட்டும் இதைப் படித்தால் என்னை வேலையிலிருந்தே நீக்கிவிடுவார்,'' என்று கெஞ்சினான். வேலனோ, ''நான் கடமை தவறாதவன். ஜமீன்தாரரிடம் வேலை செய்பவர்களைக் கண்காணித்து அறிக்கை அனுப்ப வேண்டியது என் வேலை. அதைத் தான் செய்கிறேன்,'' என்று தயை தாட்சணியம் காட்டாமல் 'பட்'டென்று கூறினான்.

மறுநாள் மாலை பாலன் வேலனை அழைத்துத் தான் எழுதிய குறிப்பை அவனிடம் காட்டி, ''இதை ஜமீன்தாரரிடம் கொடுக்கட்டுமா?'' என்று கேட்டான். அதைப் படித்த வேலன் திகைத்துப் போனான். ஏனெனில் அதில் ''தினமும் குடிபோதையில் இருக்கும் வேலன் இன்று சாராயம் குடிக்காததால் போதையில் தடுமாறவில்லை!'' என்று இருந்தது.



# உமாபதி உயர்ந்தான்!

ஒரு மன்னன் ஒவ்வொரு ஆண்டும் இளைஞர்களைக் கூட்டி அவர்களைப் பரீட்சிக்க பல கேள்விகளைக் கேட்டு, அவர்களது விடைகளைக் கொண்டு சிறந்தவர்களுக்குப் பரிசுகள் அளித்தும், ஓரிருவருக்கு அரசாங்க உத்தியோகமும் கொடுத்து வந்தான். ஒருமுறை அம்மாதிரி கூட்டிய கூட்டத்தில் உமாபதி என்ற இளைஞன் யாவருக்கும் மேலாகி முதலிடம் பெற்றான்.

அப்போது முதலமைச்சர் முத்துமாணிக்கனார், ''கைகள் இருந்தும் முடவனாக உள்ள ஒருவனைப் பற்றிக் கேட்டிருக்கிறாயா?'' என்று கேட்டார். உமாபதியும், ''கேட்டிருக்கிறேன். நான் இங்கே வரும்போது ஒரு பிச்சைக்காரன் எல்லோரிடமும் கேட்பதுபோல 'ஐயா! ஏதாவது தர்மம் போடுங்கள்!' என என்னிடம் கேட்டான். நானும் என் கைக்குக் கிடைத்த காசை அவனுக்குப் போட்டேன். அவன் ஒரு காகிதத்தில் உடனே 'இரண்டு' என்று குறித்துக் கொள்ளவே, நான் வியப்புடன் 'என்ன எழுதுகிறாய்?' என்று கேட்டேன். அவனும் 'கைகள் இருந்தும் முடவன் என்று இல்லாதவர்களைக் குறித்துக் கொள்கிறேன். நீங்கள் இரண்டாவது மனிதர்,' என்றான். கைகள் இருந்தும் ஏழைகளுக்கு தர்மம் கொடுக்காதவர்கள் முடவர்களே என அவன் கருதுகிறான்,'' என்றான்.

அப்போது முதலமைச்சர் ''இதுபோல, கண்கள் இருந்தும் குருடர்கள் என்பவர்கள் இருக்கிறார்களா?'' என்று கேட்கவே, உமாபதியும் ''இருக்கிறார்கள். ஒருமுறை ஒரு நகருக்குச் சென்றேன். அங்கு ஒரு வீடு பூட்டி இருந்தது. ஆனால் வீட்டினுள்ளிருந்து ஏதோ சத்தம் வந்து கொண்டிருந்தது. நான் உடனே 'யார்

- எஸ். சோபினி -

உள்ளே?' என்று உரக்கக் கேட்டேன். பதில் கிடைக்காததால் நான் அக்கம் பக்கத்தினரைக் கூட்டி வீட்டினுள் இருந்த திருடனைப் பிடித்தேன். அத் திருடன் என்னைப் பார்த்து 'நீ கண்கள் இருந்தும் குருடன் அல்ல! உன் மாதிரி மனிதர்கள் இல்லாமல் போனதால் தான் என் தொழில் இதுவரை நன்றாக நடந்து வந்தது,' என்றான். பூட்டி யிருக்கும் வீட்டிலிருந்து சத்தம் வரும் போது அதைக் கவனிக்காமல் ஒருவன் சென்றால் அவன் கண்கள் இருந்தும் குருடனே என்பது அத்திருடனின் கருத்து,'' என்று கூறினான்.

அடுத்து முதலமைச்சர் ''நாக்கு இருந்தும் ஊமையாக யாராவது இருக்கிறாரா?'' என்று கேட்டார். உமாபதியும் ''ஒருமுறை நான் என் ஊரின் பணக்காரர் ஒருவரிடம் கடன் வாங்க வேண்டியதாயிற்று. அவர் வட்டி பற்றிக் கூறி 'நாக்கு இருந்தும் ஊமையானவர்கள் ரூபாய்க்குக் கால் ரூபாய் வீதம் எனக்கு வட்டி கொடுக்க வேண்டும். அப்படி இல்லாதவர் எனக்கு வட்டியே கொடுக்க வேண் டியதில்லை!' என்றார். அவரது எண் ணம் கடன் வாங்கிக் கொண்டு குறித்த காலத்தில் வட்டி செலுத்துவதாகக் கூறிவிட்டு வட்டி செலுத்தாமல் சாக் குப் போக்கு காட்டுபவர்கள் நாக்கு இருந்தும் ஊமைகளே என்பதாம்!'' என்று கூறினான்.

''சொல்லாமல் போவதும், வரு வதும் மரணத்தைத் தவிர வேறு ஏதா வது இருக்கிறதா?'' என்று முதலமைச் சர் கேட்க, உமாபதியும் ''சொல்லா மல் போவது இளமை, சொல்லிவிட் டுப் போவது அதிர்ஷ்டம்,'' என்றான்.

உமாபதியின் பதிலில் திருப்தி அடைந்து, ''பலமுறை சாகிறவன் யார்?'' என்று கேட்டார். உமாபதியும் ''வீரன் ஒருமுறை இறக்கிறான். கோழையோ பயந்து பயந்து பல முறை சாகிறான்,'' என்றான்.

அதுகேட்டு முதலமைச்சர் மன் னனிடம், ''இந்த இளைஞனுக்கு தர்பாரில் உயர்பதவி கொடுக்கலாம்!'' என, மன்னனும் அவரது யோசனையை ஏற்று உமாபதிக்கு உயர் பதவியை அளித்தான்.



அம்புலிமாமாவின்
அன்பளிப்பு

# வீர தீர பராக்கிரமன் (20)

ஓவியம் : பாணி

மந்திரவாதியின் கட்டளைப்படி ரவீந்திரதேவன் குகைக் கோயிலுக்குச் சென்றான். தாந்திரீகன் நாகபந்து பாசாங்கரன் என்ற பூதத்தை உருவாக்கி, கருடனின் பாதுகாப்பிலுள்ள ஆதித்தனைப் பிடித்து வரும்படிக் கட்டளை இட்டான். நாட்டிற்குத் திரும்பிய மன்னன் மகேந்திர வர்மன் சேனாதிபதி நரேந்திரதேவனையும், அவனது மகன் ரவீந்திரதேவனையும் ராஜத் துரோகிகள் என அறிவிக்க, அவர்களைப் பிடிக்க ஆதித்தன் ஏற்பாடு செய்யலானான்.

அருணா ஆதித்தனை அவன் இடத்தில் கண்டு பேசினாள்.

நீங்கள் நாளையே புறப்படுவது தெரிந்தது. எங்கே செல்கிறீர்கள் என அறியலாமா?

சர்ப்ப தேசத்திற்குப் போய்க் கொண்டிருக்கிறேன். அங்கே உள்ள கொடியவன் தாந்திரீகன் நாகபந்துவை ஒழிக்க வேண்டும்.

அவனது சக்தி மனித இனத்தைத் தாக்கி நாசப்படுத்துமுன் நம் தாய்நாட்டைக் காக்க நான் அதனை அடக்கி ஒடுக்கி விடுவேன்.

நீங்கள் கண்டிப்பாக வெற்றி பெறுவீர்கள். கருட பகவானின் ஆதரவு உங்களுக்குக் கவசம் போல இருக்கும்.

அருணா சென்றபின் ஆதித்தன் பூஜை அறைக்குள் போய் கருட விக்கிரகத்தின் முன் அமர்ந்து தியானம் செய்யலானான்.

தேவா! நம் எதிரியை எதிர்க்கும் நேரம் வந்துவிட்டது. என் தாய்நாட்டைக் காக்க நீ தான் வழி காட்ட வேண்டும்.

திடீரென்று 'புஸ்'ஸென்ற சத்தத்தைக் கேட்டு ஆதித்தன் கண் விழித்துப் பார்த்தான். எதிரில் பெண் தலை கொண்ட பெரிய பாம்பை அவன் பார்த்தான்.

ஆதித்தா! நான் தான் பாசாங்கரன். உன் ஆட்டம் முடிந்து விட்டது. உன்னை யாராலும் காப்பாற்ற முடியாது.

ஆதித்தன் மீண்டும் கண்ணை மூடிக் கொண் டான். தாந்திரீகன் ஏதேதோ செய்வது அவனது மனக் கண்முன் தோன்றியது.





அவன் எதிரே இருந்த கருடனின் இறகு பெரிய கழுகாக ஆகி பாம்பின் மீது பாய்ந்தது. பாசாங் கரன் தப்பி ஓட முயன்றான்.



ஆனால் கழுகின் பிடியிலிருந்து அந்தப் பாம்பால் தப்ப முடியவில்லை. சிறிது நேரம் போராடியது. பிறகு தன் வாயிலிருந்து நெருப்பைக் கழுகின் மீது கக்கியது.



ஆனாலும் கழுகு பாசாங்கரனைக் கொத்திக் குதறி காயப்படுத்தி, அதைத் தூக்கிக் கொண்டு பறந்து போய் தாந்திரீகனின் குகைவாசலில் எறிந்தது.

ஏதோ 'பொத்'தென விழுந்த சத்தம் கேட்டு நாக பந்து குகையிலிருந்து வெளியே வந்து பார்த் தான். பாசாங்கரன் விழுந்து துடிதுடிப்பதைக் கண்டு பிரமிக்க, கழுகு பறந்து போய்விட்டது.






ஆதித்தன் தியானத்தில் இருக்கையிலேயே நடந் ததை எல்லாம் தெரிந்து கொண்டுவிட்டான்.

பெண் தலையுடன் இருந்த பாசாங்கரன் நெருப்பைக் கக்கியவாறே தன் பழைய உருவை அடைந்தான்.







பாசாங்கரன் புகையாக மாறி மறைந்து போனான்.

நாகபந்து என்ன செய்வது என்று திகைத்தான்.






தாந்திரீகனின் அறைகூவல் ஆதித்தனின் தியானத் தைக் கலைக்க, ஓர் அதிசய ஒளி அவனை அணுகியது.

ஒரு மென்மையான இனிமையான குரல் கேட்டது.



அந்த இனிய குரல் அவனுக்கு மிக அருகில் மீண்டும் அவன் காதில் ஒலித்தது.







கருடன் எவ்வளவோ சக்திகளை அளித்திருப்ப தாக ஆதித்தன் உணர்ந்தான்.




அந்த இனிமையான குரல் ஒலிப்பது நின்றதும் ஆதித்தன் எழுந்து நின்றான்.

ஆதித்தன் அந்த இறகை பத்திரமாகத் தன் தலைப் பாகையில் சொருகி வைத்துக் கொண்டான்.







தொடரும்

# கேளிக்கை நேரம்

## ஆட்டை உருவாக்குங்கள்

**காய்கறிகளில் உருவங்களைச் செய்வது களிப்பூட்டும் கலை. நீங்களும் செய்து பாருங்களேன்!**

தேவைப்படுபவை :- ஒரு தட்டு தோட்ட மண், கடுகு, வெள்ளை முள்ளங்கிகள், காலிஃப்ளவர், கெட்டியான குச்சி, கத்தி, பசை.




ஆட்டை உருவாக்குவதற்குச் சில நாட்களுக்கு முன் தட்டு தோட்ட மண்ணில் கடுகை விதைத்து தினமும் தண்ணீர் தெளித்து வரவும். நான்கைந்து நாட்களில் கடுகு உயர்ந்து வளர்ந்து சிறு புல்வெளி போல ஆகிவிடும். அதில் ஒரு காலிஃப்ளவரை நட்டால் அது மரம் போல காட்சியளிக்கும்.

ஆட்டை உருவாக்க முள்ளங்கியின் கீழ்முனையை வெட்டி தலையாக வைக்க வேண்டும். நுனியில் சிறிது பிளந்து வைத்தால் அது ஆட்டின் வாயாகிவிடும். கண்களுக்காக இரண்டு காராமணிப் பயறுகளை செருகலாம்.

முள்ளங்கியின் மத்தியப் பகுதி ஆட்டின் உடல், கால்கள், கழுத்து ஆகியவற்றிற்கு சிறு குச்சிகளை அதில் செருகவும். வட்டமாக நறுக்கிய முள்ளங்கித் துண்டுகளை உடலின் ரோமம் போல பசையால் ஒட்டவும். காதுகளுக்கு சிறு வட்ட முள்ளங்கித் துண்டுகளைப் பொருத்தவும்.

இப்போது ஆடு தயார். இதை எடுத்து புல்வெளி போலத் தயாரிக்கப்பட்ட தட்டில் வைக்கவும்.

# கண்டுபிடியுங்கள்!

இந்த இரு படங்களும் பார்க்க ஒன்றுபோல இருந்தாலும் எட்டு அம்சங்களில் மாறுபட்டவை. அவற்றைக் கண்டுபிடியுங்கள்!





# முயல் ரோஹித்திற்கு உதவுங்கள்!

அடடா! ரோஹித் முயல் உடல்நலக் குறைவாக உள்ளது. அதன் மருந்து, மாத்திரைகள் அறையில் சிதறி இருக்கின்றன. நீங்கள் அதற்கு எடுத்துக் கொடுத்து உதவுங்களேன்! அவை எத்தனை என்றும் சொல்லுங்கள்!

*(விடைகள் 66ம் பக்கத்தில்)*



வாக்கியம் உருவாக்குங்கள்

# போட்டோ வாக்கியப் போட்டி





**இந்த போட்டோக்களுக்கு ஒவ்வொரு சொல்லாலோ, அல்லது சிறு வாக்கியங்களாலோ தொடர்புடையதாக எழுதி அனுப்புங்கள்.**

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25ந் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/- போட்டி முடிவு ஜனவரி 2003 இதழில் வெளியிடப்படும்.

போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

## வாழ்த்துக்கள்!

செப்டம்பர் 2002 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :

*பி. கண்ணன்*
*12/273, கண்ணதாசன் சாலை,*
*முகப்பேர் கிழக்கு,*
*சென்னை - 600 050.*

பரிசு பெற்ற வாக்கியங்கள்





பூவோடு ஒரு மொட்டு
பாத்திரத்தோடு ஒரு மலர்

கேளிக்கை நேரம் விடைகள் (பக்கம் 64)

## கண்டுபிடியுங்கள் !

1. குல்லா நுனியிலுள்ள குஞ்சம்
2. குல்லாயின் வடிவமைப்பு
3. கொம்பின் கோடுகள்
4. ஆட்டின் நான்காவது கால்
5. ஆட்டின் தாடி
6. மேகக் கூட்டம்
7. சிறுவனின் சட்டைப் பை
8. பூட்ஸின் வடிவமைப்பு

முயல் ரோஹித்திற்கு உதவுங்கள்!

38 மருந்து, மாத்திரைகள்

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 600 026 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : Viswam

